# தர்மசக்கரம்



சித்தார்த்தி ௵ சித்திரை ௴ சக்கரம் 28 ஆரம் 4

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை-639 115 திருச்சி ஜில்லா.

# அந்தர்யோக விவரங்கள்

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 15—4—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: விவேகானந்த கல்லூரி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

உணவு வசதி: நேரில் பகல் உணவிற்கு ரு 1-00ம், மாலைசிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.

**திருநெல்வேலி ஜில்லா—கோவில்பட்டியில் 22—4—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: ரயில்வே ஸ்டேஷனுக்கருகிலுள்ள லாயல்மில் ஆரம்பப்பாடசாலை

நேரம்: காலை 10-00 மணி முதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்

**மதுரை ஜில்லா—தேனியில் 25—4—79 புதன்கிழமை**

இடம்: ஸ்ரீ கணேச கந்தப்பெருமான் ஆலயம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-00 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

பகல் உணவிற்கு ரு. 1-50 நேரில் செலுத்தி சீட்டுப்பெற்றுக்கொள்ளலாம்.

**பெங்களூரில் 29—4—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: கன்டோன்மென்ட் அஜந்தா டாக்கீஸ் எதிரிலுள்ள ஒடுக்கத்தூர் சுவாமிகள் மடம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**கோவை ஜில்லா—வையம்பாளையத்தில் 29—4—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: சுதந்திர உயர்நிலைப்பள்ளி

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

**தர்மபுரி ஜில்லா—காவேரிப்பட்டணத்தில் 30—4—79 திங்கட்கிழமை**

இடம்: தபோவனம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

உணவு வசதி: நேரில் உணவுச்சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்

**வடஆற்காடு ஜில்லா—துரிஞ்சாபுரத்தில் 1—5—79 செவ்வாய்க்கிழமை**

இடம்: புஷ்பகிரி ஸ்ரீ பாலசுப்பிரமணிய சுவாமி கோவில்

நேரம்: காலை 10-00 மணி முதல் மாலை 4-30 மணி வரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

**இராமநாதபுரம் ஜில்லா—விருதுநகரில் 13—5—79 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: சிம்னி நந்தவனம்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்

**மதுரை ஜில்லா—சுருளிமலையில் 16—5—79 புதன்கிழமை**

இடம்: சுருளி தீர்த்தத்துக்கருகில்

நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை

நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

13.4.79
ACC.NO. 38676

தர்ம சக்கரம்
மாத சஞ்சிகை

| சக்கரம் 28 | சித்தார்த்தி ௵ சித்திரை ௴ | ஆரம் 4 |
|---|---|---|

பொருளடக்கம் பக்கம்



## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா: ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்மசக்கரப் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தாச் செலுத்திப் புதுப்பிக்கவேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா: ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா: தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்துச் செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் ‘ தர்ம சக்கர உதவி நிதி ’ யினின்று ஈடு செய்து கொள்கிறோம். தெய்விக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிற வர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

இலவச சந்தா: தமிழ் நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் அரசாங்கத்தால் 1496 பொது நூலகங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. அவை அனைத்துக்கும் தர்ம சக்கரம் அன்பர் களின் உதவியால் தொடர்ந்து இனமாக அனுப்பப்பெறுகிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப் பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம். இந்த ஞானயக்ஞத்துக்குப் நிதியாக நன்கொடை ஏற்றுக்கொள்ளப்பெறும். வேண்டும் பொழுது திரும்பப் பெற்றுக் கொள்ளும்படியாக வட்டி இல்லாக் கடனும் தந்து உதவலாம்.

உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00

NEW RELEASE JUST OUT

# शिवसहस्रनामस्तोत्रम्

# SIVA SAHASRANAMA STOTRAM

( With Namavali )
( Introduction and English Rendering )

BY
**SWAMI CHIDBHAVANANDA**

This book is a companion volume of Sri Vishnu Sahasranama Stotram and the Sri Lalithambika Sahasranama Stotram.

CROWN 8VO — 145 PAGES
**Price Rs. 3–50**

---

# श्री विष्णुसहस्रनामस्तोत्रम्

# SRI VISHNU SAHASRANAMA STOTRAM

( THIRD EDITION )

BY
**SWAMI VIMALANANDA**

The Stotra in full with Dhyana slokas—Each nama of Sri Mahavishnu arranged for internal and external worship—A brief explanation of every name—An index of all names to fecilitate ready reference to the sense of each—An introduction setting forth the significance of this *Mahamantra* for the religious aspirant. According to the declaration of the sage who promulgated this gem of the *Mahabharata*, this holy song of divine names, it has the power to grant spiritual and material excellences to the Bhakta who repeats it with faith and meditates its meaning.

CROWN 8VO — 172 PAGES
BOLD AND ATTRACTIVE TYPE

**Price Rs. 4–00** Postage Rs. 2-50

SRI RAMAKRISHNA TAPOVANAM
(PUBLICATION SECTION)
TIRUPPARAITTURAI - 639 115, TIRUCHIRAPALLI DT.

# ஸ்ரீ தாயுமான சுவாமி கோயில் திருப்பணி



ஸ்ரீ தாயுமான சுவாமிகள் கோயில் திருப் பணிக்குத் தொகை சுமார் ஆறு இலட்சம் ரூபாய் ஆகும் என மதிப்பிடப்பட்டிருக்கிறது. மார்ச் மாதம் முடிய வந்துள்ள நன்கொடை களின் தொகை இங்கு வெளியிடப்பட்டிருக் கிறது.

பங்குனி மாத இதழில் தெரிவித்துள்ள ஐந்து வீட்டுக்காரர்களும் பாதை அமைப்பதற்குத் தேவையாயுள்ள இடத்தை விலைக்கு விற்கச் சம்மதித்துள்ளார்கள். இப்பொழுதுள்ள பாதையைச் சமாதி நிலத்தோடு சேர்த்துக் கொள்ளுதற்கும், அதற்குப் பதிலாகப் புதிதாக வாங்குகிற நிலத்தைப் பரிவர்த்தனம் பண்ணு வதற்கும் இராமநாதபுரம் நகராட்சி நிர்வாகத் தோடு கடிதப் போக்குவரத்து நிகழ்ந்து கொண் டிருக்கிறது. அதை அவர்கள் தமிழ்நாடு அரசாங்கத்தின் அனுமதிக்காக அனுப்பியுள் ளார்கள். இந்த ஒப்பந்தத்துக்கு அரசாங்க அனுமதி வந்தவுடன் பூமி கிரயத்துக்கு எடுத் துக்கொள்ளப்படும்.

## 1979 மார்ச் மாத நன்கொடை விவரம்

| தேதி | விலாசம் | | ரூபாய் |
|---|---|---|---|
| | பிப்ரவரி மாதம் முடிய நன்கொடை வசூல் | | 2 53 097 |
| 3-3-79 | ஸ்ரீ S. S. கிருஷ்ணமூர்த்தி | நாகல்நகர், திண்டுக்கல் | 151 |
| | ஸ்ரீமத் சுவாமி நிர்மலானந்த | ரிஷிகேஷ், உத்தரப்பிரதேசம் | 116 |
| 4-3-79 | ஸ்ரீமதி J. சத்யபாமா | செல்வீஜர் தெரு, தூத்துக்குடி | 250 |
| | ஸ்ரீ S. ஆறுமுகம் | செவ்வாய்பேட்டை, சேலம் | 250 |
| 5-3-79 | ஸ்ரீ P. தங்கராஜன் | T. நகர், சென்னை | 150 |
| | ஸ்ரீK.M.தங்கராஜகோபாலன் மாரியப்பா | தர்மவித்யாசாலை, எட்டயபுரம் | 106 |
| | ஆசிரியர்கள் &.ஆசிரியைகள் | ,, ,, | 101 |
| | ஸ்ரீமதி R. காமாக்ஷி அம்மாள் | விராட்டிபத்து, மதுரை | 101 |
| | ஸ்ரீ V. V. P. தனகோட்டி செட்டியார் | குகை, சேலம் | 101 |
| | ஸ்ரீமதி சரோஜா ஷண்முகம் | ஒக்கிலியர் வீதி, கோவை | 101 |
| | ஸ்ரீ N. காளியப்ப கவுண்டர் | சீதப்பட்டி மாலைமேடு, தாராபுரம் | 101 |
| | ஸ்ரீ K. V. தேசிங்குராஜா | ராஜபாளையம் | 100 |
| | ஸ்ரீமதி K. T. தாயம்மாள் | ,, | 100 |
| | ஸ்ரீமதி B. இராஜகாந்தம் | நாராயணகுப்பம், வடஆற்காடு | 100 |
| | ஸ்ரீமதி திலகவதி செல்வபதி | வெங்கடேசபுரம், சென்னை | 100 |
| 6-3-79 | ஓர் பக்தை | உறையூர், திருச்சி | 101 |
| | ஸ்ரீ P. M. வாசுதேவன் | கோத்தகிரி, நீலகிரி | 101 |

| | | | |
|---|---|---|---|
| 7-3-79 | ஸ்ரீ V. பாப்புராஜா | ராஜபாளையம் | 175 |
| | ஆசிரியர்கள் & ஆசிரியைகள் V. E. S. | திருப்பராய்த்துறை | 151 |
| | ஸ்ரீ P. குமரேசன் | அய்யனூர்கோவில்தெரு, திருவாரூர் | 101 |
| | ஸ்ரீமதி N. ரேவதிரத்தினம் | கோட்டைகுளம்ரோடு, திண்டுக்கல் | 101 |
| | ஸ்ரீ P. வரதராஜுலு ரெட்டியார் | மகாதேவி, திருச்சி | 100 |
| 8-3-79 | ஸ்ரீ N. குப்புசாமி கவுண்டர் | கொங்குபட்டி, சேலம் | 101 |
| | ஸ்ரீ T. C. ஷண்முகம் | சீதாவிலாஸ், குன்னூர் | 101 |
| 9-3-79 | ஸ்ரீ K. சிவசுப்பிரமணியபிள்ளை | சினிவாசமுதலியார் தெரு, ஈரோடு | 101 |
| | ஸ்ரீமதி A. புவனேசுவரி | கீழுவயலூர், தஞ்சை | 100 |
| 12-3-79 | கண்ணபிரான் மில்ஸ் லிமிடெட் | சௌரிபாளையம், கோவை | 2 001 |
| | C.P.M. விசாலக்ஷ்மி டிரஸ்ட் | வைசியாள் தெரு, ,, | 1 001 |
| | மெட்ராஸ் ஸ்பின்னர்ஸ் லிமிடெட் | சிங்காநல்லூர் ,, | 1 001 |
| | தி குமரன் மில்ஸ் லிமிடெட் | பீளமேடு ,, | 1 001 |
| | மெட்ராஸ் போர்ஜிங் இண்டஸ்டிரீஸ் C.B.E. லிமிடெட் | காரமடை ,, | 1 000 |
| | குகனு இண்டஸ்டிரீஸ் | பட்டேல் ரோடு, ,, | 501 |
| | ராமகிருஷ்ணு & கம்பெனி | அவினாசி ரோடு, ,, | 251 |
| | புளுமௌண்ட் மெஷின் டூல்ஸ் பிரைவேட் லிமிடெட் | கவர்மெண்ட் பிரஸ் காலனி, ,, | 251 |
| | ஸ்ரீ வெங்கடேஸ்வரா இன்ஜினியரிங் ஒர்க்ஸ் | M.T.பாளையம் ரோடு ,, | 251 |
| | ராம் பவுண்டரி | P.N. பாளையம், ,, | 250 |
| | வேக்பீல்டு இன்ஜினியரிங் கோ | பீளமேடு, ,, | 250 |
| | ஸ்ரீ G.K. ஸ்டீல்ஸ் & இண்டஸ்டிரீஸ் | K. வடமதுரை ,, | 250 |
| | ஸ்ரீ சினிவாசா பவுண்டரி | P.N. பாளையம் ,, | 250 |
| | காமெட் கேஸ்டிங்ஸ் | உக்கடம் ,, | 250 |
| | கந்தவேல் பவுண்டரி | கணபதி P.o. ,, | 200 |
| | வித்யா இண்டஸ்ட்ரீஸ் | பீளமேடு ,, | 150 |
| | ஸ்ரீ P. ராஜு நாயுடு & கோ | கணபதி ,, | 101 |
| | ஸ்ரீ விக்னேஸ்வர் இண்டஸ்ட்ரீஸ் | அவினாசி ரோடு ,, | 101 |
| | J.K.P. மெட்டல் பார்மெர்ஸ் | கிருஷ்ணராயபுரம் ,, | 101 |
| | ஸ்ரீ M. நம்பியப்ப கவுண்டர், மாப்பிள்ளை கவுண்டன் | புதூர் ,, | 101 |
| | ஸ்ரீமதி மங்களாம்பாள் | காலேஜ் ரோடு, திருப்பூர் | 100 |
| | துரைமணி பவுண்டரி | கணபதி, கோவை | 100 |
| | ஓர் அன்பர் | ,, | 200 |
| 13-3-79 | மங்கையர்கரசி மாதர்சங்கம் | சாத்தூர் | 201 |
| | ஸ்ரீ E.A.S. ஆறுமுக நாடார் & சன்ஸ் | ,, | 101 |
| | ஸ்ரீ P. அனந்தப்பசாமி & சன் | ,, | 101 |
| | அசோகா பாக்கு கம்பெனி (பி) லிட் | Dr. நஞ்சப்பா ரோடு, கோவை | 101 |
| 14-3-79 | ஸ்ரீ S.V. சிங்காரம் | ஜாலான் ரிமிஸ், சிங்கப்பூர் | 300 |
| 15-3-79 | சூரிய பிரபா மில்ஸ் பிரைவேட் லிமிடெட் | குனியமுத்தூர், கோவை | 1 001 |
| | ஸ்ரீ ஹரி மில்ஸ் பிரைவேட் லிமிடெட் | ஒண்டிபுதூர், கோவை | 1 000 |
| | ஸ்ரீ A.R. ராதாகிருஷ்ணன்–காவேரி ஆயில்சீட்ஸ்புராசெஸிங் கோ, | தேவி | 108 |

| | | | | |
|---|---|---|---|---|
| *16–3–79* | முருகன் ஆர்ட் பிரிண்டர்ஸ் | P. N. பாளையம் | கோவை | *100* |
| *19–3–79* | சௌத் இந்தியா விஸ்கோஸ் லிமிடெட் | ரேஸ் கோர்ஸ்ரோடு, | கோவை | *5 000* |
| | ஸ்ரீ S.S. சங்கரப்பநாயக்கர் | காட்டன்மெர்சண்ட் | தேனி | *101* |
| *20–3–79* | எல்டெக்ஸ் இன்ஜினியரிங் கார்பரேஷன் (பி) லிட் | கணபதி, | கோவை | *1 001* |
| *21–3–79* | Dr. M. R. சுப்பையா | | கோபிசெட்டிபாளையம் | *250* |
| *22–3–79* | ஸ்ரீ A. சிவப்பிரகாசம் | திருவள்ளுவர்தெரு, | மதுரை | *1 001* |
| | ஸ்ரீ A. S. K. ரத்னசாமி நாடார் சாரிட்டீஸ் | V. E. ரோடு, | தூத்துக்குடி | *1 000* |
| | ஓர் அன்பர் | | சென்னை | *201* |
| *24–3–79* | தி ஸ்ரீ வெங்கடேசா மில்ஸ் லிமிடெட் | | உடுமலைப்பேட்டை | *2 000* |
| | M/s டியூல் இன்ஜினிரிங் இண்டஸ்ட்ரீஸ் | P.N. பாளையம், | கோவை | *200* |
| | M/s பாரத் பவுண்டரி | ,, | ,, | *101* |
| | ஸ்ரீ N. S. ராஜன் | | ஆம்பூர், வ. ஆ. ஜில்லா | *100* |
| *26–3–79* | ஸ்ரீ T. M. K. செல்வராஜ் | M. C. ரோடு, | சென்னை | *101* |
| | ஸ்ரீ T. S. T. ராஜா நாடார் | ராஜகோபால் நாயுடு தெரு | ,, | *101* |
| | ஸ்ரீ P. காசிராஜ நாடார் | வண்ணரைப்பேட்டை | ,, | *101* |
| | ஸ்ரீ T. சித்திராண்டியாபிள்ளை | விக்கிரமசிங்கபுரம் | திருநெல்வேலி | *101* |
| *27–3–79* | சர்குண டெக்ஸ்டைல்ஸ் (பி) லிட் | அவிநாசி ரோடு, | கோவை | *301* |
| *28–3–79* | M/s கொல்லம் ரேடியோ சர்வீஸ் | மெயின் ரோடு, | கொல்லம் | *1 000* |
| | ஸ்ரீ M. சுப்பையா கோனார் | மூலைகரைப்பட்டி, | திருநெல்வேலி | *101* |
| *31–3–79* | M/s A.S.K. ரத்னசாமி நாடார் & கோ | பேஸின்பிரிட்ஜ் ரோடு, | சென்னை | *1 000* |
| | M/s N. வீராச்சாமி செட்டியார், | | கோவை | *1 000* |
| | ஸ்ரீ A. S ராஜசேகரன் | கீழமாசிதெரு, | மதுரை | *100* |
| | ஸ்ரீ V. M. ஞான சபாபதி நாடார் | தெப்பம் மேற்குபஜார், | விருதுநகர் | *100* |
| | ஸ்ரீமதி அம்பாள் M. ராமசாமி | மெயின்பஜார் | ,, | *100* |
| | ஸ்ரீ A. V. தனுஷ்கோடி C/o V. P. S. A. | அன் சன்ஸ் | ,, | *100* |
| | ஸ்ரீ R. கிருஷ்ணசுவாமி ரெட்டியார் | ராதாஸ் எண்டர்பிரைசஸ், | கொல்லம் | *200* |
| | ஸ்ரீமதி B. குணபோல் அம்மா, | S.T. ரெட்டியார் & சன்ஸ் | ,, | *101* |
| | ,, R. விசாலாட்சி அம்மாள் | ரெத்னமஹால் | ,, | *100* |
| | ,, D. ருக்மணி அம்மா | தாமரைக்குளம் ரோடு, | ,, | *100* |
| | ,, N. கிருஷ்ணவேணி | மெயின்ரோடு, | ,, | *100* |
| | ஸ்ரீ K. சீனிவாச ரெட்டியார் | ,, | ,, | *100* |
| | ,, A. அசோகன் | கொல்லம் ரேடியோ சர்வீஸ் | ,, | *100* |
| | ,, சந்திரன் ஆஸ்ரமம் | | ,, | *100* |
| | Dr. குறியன் | லையன்ஸ் காலனி | ,, | *100* |
| | ஸ்ரீ S.M.K. நடராஜன் | | சாத்தூர் | *100* |
| | ,, தில்லைநடராஜன் | திருப்பதி வெங்கடாசலபதி சர்வீஸ் | ,, | *100* |
| | அந்தர்யோக கமிட்டி | | கோவில்பட்டி | *100* |
| | K.S.P.N. டிரஸ்ட் | | மேலூர் தூத்துக்குடி | *100* |
| | ஸ்ரீ M. வைரவேல் | கீழரதவீதி | ,, | *100* |
| | ,, அ.மா.ம.ஆ. ஜெயராஜ் நாடார் & சன்ஸ் | வடக்குரதவீதி | ,, | *100* |
| | ஸ்ரீமதி அ. ராஜம்மாள் | சிவன்கோவில் தெரு | ,, | *100* |

| | | | | |
|---|---|---|---|---|
| 31-3-79 | ஸ்ரீ A. கிரஹவேல் | நேஷனல் பயர் ஒர்க்ஸ் பாக்டரி | சிவகாசி | 100 |
| | ,, கணபதிராம் & கோ | சங்கரன் கிணர் தெரு, | விருதுநகர் | 100 |
| | ஏகாதசி மாதர் குழு ஸ்ரீ அமுதலிங்கேஸ்வரர் தேவஸ்தானம் | | அருப்புக்கோட்டை | 100 |
| | ஸ்ரீ T.S. திருஞானசம்பந்தம் செட்டியார் | ரேஸ்கோர்ஸ் | கோவை | 100 |
| | ,, மதுசூதன் டிரேடிங் கம்பெனி | | ரெய்சூர் | 100 |
| | ,, G.P.R. மனோகரன் | ராஜு நாயுடு & சன்ஸ் | கோவை | 100 |
| | ஸ்ரீ லெக்ஷ்மி காட்டன் கார்பரேஷன் | | ,, | 100 |
| | M/s. ஜெயலக்ஷ்மி காட்டன் கோ | | ,, | 100 |
| | துளசி காட்டன் கோ | காட்டூர் | ,, | 100 |
| | திரு மாலா டிரேடர் | | ,, | 100 |
| | M/s. கமல் இண்டஸ்ட்ரீஸ் | ரத்னபுரி | ,, | 101 |
| | M/s. நியூஸ்டார் இன்ஜினியரிங் & டிரேடிங்கோ | ஒப்பண்ணக்கார தெரு | | 100 |
| | ஸ்ரீ சரவணா இன்ஜினியரிங் இண்டஸ்ட்ரீஸ் | P. N. பாளையம் | ,, | 100 |
| | ,, K. சந்திரன் | ,, | ,, | 100 |
| | M/s எவரெஸ்ட் என்டர் பிரைசஸ் | R. K புரம் | ,, | 101 |
| | ,, எல்கோ இண்டஸ்டிரீஸ் | ராஜு நாயுடு லேஅவுட் | ,, | 100 |
| | ,, கிருஷ்ணா பேங்லேட் | ,, | ,, | 100 |
| | ஸ்ரீ சாரதா இண்டஸ்டிரீஸ் | கணபதி | ,, | 100 |
| | M/s. ஜான் ஜானுவாலா காட்டன் ஏஜன்சீஸ் | | பம்பாய் | 100 |
| | ,, R. ரெட்டிலால் & கோ | | ,, | 100 |
| | ஸ்ரீ K. M. கண்ணன் | | ஆற்காடு, வ. ஆ. மாவட்டம் | 100 |
| | ,, G. ஏகாம்பரம் | எரபாலு செட்டி தெரு, | சென்னை | 100 |
| | ,, ராம. மாரியப்பன் செட்டியார் | குமரன் ஆசாரி தெரு, | விருதுநகர் | 100 |
| | ஸ்ரீமதி T.R. சொர்ணம்மாள் | ரத்தினசாமி ஷண்முகநாடார் தெரு | ,, | 100 |
| | ஸ்ரீ N. S. A. அதிர்ஸ்டம் அசோகன் | கிட்டங்கி தெரு | ,, | 100 |
| | ,, V. V. V. ராஜேந்திரன் | பெரியகடை வீதி | ,, | 100 |
| | ,, V. V. V. குணசீலன் | ,, | ,, | 100 |
| | ,, A. N. கோவிந்தசாமி | கஸ்தூரி எஸ்டேட் | சென்னை | 100 |
| | ஸ்ரீமதி இந்திரன் ராமச்சந்திரன் | பாலரெங்கபுரம் | மதுரை | 100 |
| | ,, ஜெயமணி ராஜகுமார் | லட்சுமி புரம் | ,, | 100 |
| | ஸ்ரீ P. K. நடராஜ நாடார் | ,, | ,, | 100 |
| | ,, V. V. V. ஆனந்தம் | சுவாமி சன்னதி லேன் | ,, | 100 |
| | Dr. S. சண்முகம் | சரோஜினி தெரு | ,, | 100 |
| | ஸ்ரீ A. சங்கர நாராயண நாடார் | அந்தோணியார் கோயில் தெரு | ,, | 100 |
| | அருள்துணை சிறுவர் சங்கம் | ஆனந்த ஆஸ்ரமம் | ,, | 100 |
| | ஸ்ரீ S. ராமசாமி கவுண்டர் | பூச்சக்காட்டுப்புதூர் | கோவை | 101 |
| | மதுரை அருள்துணை மாதர் சங்கத்தினர் வசூலித்தது | | | 3 000 |
| | ரூ. 100க்குக் கீழ் வந்த நன்கொடைகள் | | | 4 595 |
| | ஸ்ரீ V.V.H.S. குருகுல மாணவர்கள் மூலம் 100க்குக் கீழ்வந்த நன்கொடைகள் | | | 5 288 |
| | | | | 3 02 281 |







# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 28 | சித்தார்த்தி ஹு சித்திரை மீ | ஆரம் 4

## பிரார்த்தனை

प्रभो शूलपाणे विभो विश्वनाथ महादेव शम्भो महेश त्रिनेत्र ।
शिवाकान्त शान्त स्मरारे पुरारे त्वदन्यो वरेण्यो न मान्यो न गण्यः ॥

ப்ரபோ சூலபாணே விபோ விஸ்வநாத
மகாதேவ சம்போ மஹேச த்ரிநேத்ர ।
சிவாகாந்த சாந்த ஸ்மராரே புராரே
த்வதன்யோ வரேண்யோ ந மான்யோ ந கண்ய: ॥

இறைவா, திரிசூலத்தை உடையவரே, எங்கும் நிறைந்தவரே, விஸ்வநாதா, மகாதேவா, நலந்தருபவரே, அனைத்தையும் ஆள்பவரே, முக்கண்ணரே, அம்பிகை மணாளா, அமைதியின் வடிவமே, காமனைக் கொன்றவரே, முப்புரங்களை அழித்தவரே, தமக்கு அன்னியமாகப் போற்றுதற்கோ பாராட்டுதற்கோ யாருமில்லை.

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக்(கு) உய்ப்பது
வேத நான்கினு(ம்) மெய்ப்பொரு ளாவது
நாதன் நாம நமச்சி வாயவே.

# அருள் விருந்து

குழந்தையின் பாங்கும், தெய்விகமும் ஒன்றே.

நம் அமைப்புக்கு ஆதிமூலமாயிருப்பது ஆத்மன்.

பிறர் நலனில் ஈடுபடுவதற்கேற்ப மனிதன் மேலோனுகிறுன்.

பொய்யும், நெறிவழுவுதலும் ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றன.

மானுடன் பெற்றுள்ள பேறுகளில் மிகப் பெரியது பண்பட்ட மனம்.

இயற்கையின் நடைமுறையும், இறைவனுடைய திருவுளமும் ஒன்றேயாம்.

அனுபவத்துக்குத் தூண்டுகோலாயிருப்பது அன்பு. அன்போ அறிவுக்கும் மேலானது.

பக்தி நெறியில் ஆழ்ந்து செல்பவனுக்கு பிரம்மச்சரிய விரதம் எளிதில் அமைகிறது.

பிறரிடம் குற்றம் காணுதே. உன்னை நீ யாண்டும் ஒழுங்குப்படுத்திக் கொண்டு இரு.

எல்லாச் சூழ்நிலைகளிலும் மனதை நிறைநிலையில் வைத்திருப்பவன் மேலோன் ஆகிறுன்.

மனிதனுடைய சிந்தைகளும் செயல்களும் அவனை மேலோனுகவோ, கீழோனுகவோ உருவாக்கி வருகின்றன.

காலத்துக்கு நிகரான வாய்ப்பு மனிதனுக்கு இல்லை. கடந்துபோன காலத்தை அவன் மீண்டும் பெறமுடியாது.

சென்றதைப் பற்றியோ வருவதைப் பற்றியோ சிந்தனை கொள்ளாது யாண்டும் நடுநிலையிலிருப்பவன் ஞானியாகிறுன்.

இன்பமும், துன்பமும் பிறரால் திணிக்கப்பட்டு வருவனவல்ல. அவைகளை மனிதன் தனக்குத் தானே வகித்துக்கொள்கிறுன்.

நதி பெருக்கெடுத்து ஓடும் பொழுது பற்றிப்பிடிப்பதற்குப் பாறை உதவுகிறது. மணற்குவியல் உதவாது. பாறைக்கு நிகர் சத்தியம்.

கவர்ச்சிகரமான உலக நடைமுறைகளில் அகப்பட்டுக்கொள்ளாதே. அவைகளுக்கப்பாலுள்ள ஆத்மசொரூபம் நீ என்பதை நினைவில் வைத்துக்கொள்.

## பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

மகிமசரணருடன் பரமஹம்சதேவர் தொடர்ந்து உரையாடிக் கொண்டிருக்கிறார். அவர் பகர்ந்ததாவது: "ஜீவாத்மன் என்னும் வியக்தி பரமாத்மன் என்னும் அகண்ட வஸ்து விலிடத்திருந்து உருவெடுத்து வந்திருக்கிறது என்பதை நான் அனுபூதியில் அறிந்திருக்கிறேன். அகண்ட சத்சித் ஆனந்தம் யாண்டும் உள்ளது என்பது நான் அனுபூதியில் கண்டறிந்துள்ள உண்மையாகும். வியாவகாரிக நிலையில் உள்ளவைகள் யாவும் அம்மெய்ப் பொருளிடத்திருந்து வடிவெடுத்து வந்தவைகள். அப்படி வடிவெடுத்து வந்தவைகள் மீண்டும் அம்மெய்ப்பொருளினிடத்தே ஒடுங்கிப் போகின்றன. அந்தச் சிதாகாசத்தில் கோடானுகோடி பிரம்மாண்டங்கள் தோன்றி வருகின்றன. அவையாவும் மீண்டும் அதனிடத்தே ஒடுங்குகின்றன. இவை யாவும் நான் அனுபூதியில் அனுபவித்துள்ள உண்மைகளாம். இக்கோட்பாடுகளைக் குறித்து சாஸ்திரங்கள் என்ன பகர்கின்றன என்பது எனக்குத் தெரியாது."

மகிமசரண்: "இத்தகைய அனுபூதி வாய்க்கப்பெற்றவர்கள் சாஸ்திரங்களை எழுதிவைக்கவில்லை. அனுபூதியிலேயே அன்னவர்கள் ஆழ்ந்து மூழ்கியிருந்தனர். எப்பொழுதாவது அவர்கள் கீழ்நிலைக்கு இறங்கிவந்து தங்கள் அனுபூதியைப்பற்றி எழுதிவைப்பார்களா? அவைகளை எழுதிவைக்க வேண்டும் என்னும் எண்ணம் வருவதற்குச் சிறிதளவு இலெளகிக மனப்பான்மை தேவையாயிருக்கிறது. இவ் உண்மைகளை சாட்சாத்கரித்த ரிஷிகளிடத்திருந்து மற்றவர்கள் கேட்டறிந்துகொண்டனர். பிறகு அவைகளை நூல்களாக இயற்றிவைத்தனர்." ஆக எழுதிவைத்துள்ள சாஸ்திரங்கள் சரியா தப்பா என்று அறிந்துகொள்ளுதற்கு அனுபூதிமான்களே பிரமாணமாகின்றனர். அனுபூதிமான்கள் ஏற்றுக்கொள்ள மறுக்கிற சாஸ்திரக் கோட்பாடுகளை தத்துவத்துக்குப் பொருந்தாதவைகள் என ஒதுக்குவது முறை.

பரமஹம்சதேவர்: "மானுடனொருவன் உலக ஆசைகளை ஏன் உதறித்தள்ளுவதில்லை என்னும் கேள்வியை உலகத்தவர்கள் கிளப்புகின்றனர். ஈஸ்வரானுபூதி வாய்க்கப்பெற்றபிறகே உலகப்பற்று மறைந்துபட்டுப் போகிறது. அனுபூதிமான் ஒருவன் பிரம்மானந்தத்தை ஒருதடவை அனுபவித்தால் இந்திரிய சுகங்களில் பிறகு அவனுக்கு நாட்டம் வருவதில்லை. செல்வமும், பேரும், புகழும் பொருளற்றவைகளாக அவனுக்குப் புலப்படுகின்றன. தீ வெளிச்சத்தை ஒருதடவை காண்கின்ற விட்டில் பூச்சி மீண்டும் இருளை நாடிப் போவதில்லை. அதே விதத்தில் ஆத்மானந்தத்தை அனுபவிக்கிறவர்கள் விஷயானந்தத்துக்குக் கீழே இறங்கி வருவதில்லை.

இராவணனுடைய நண்பர்கள் சிலர் அவனிடம் இயம்பியதாவது: "சீதையின் முன்னிலையில் நீ ஏதேதோ வடிவங்கள் எடுத்துத் தோன்றியிருக்கிறாய், ராமனுடைய வடிவெடுத்து நீ ஏன் அவளிடம் போய் அவளை ஏமாற்றலாகாது?" இராவணன் விடுத்த விடையாவது: 'ராமனைப் பற்றிய எண்ணம் என் உள்ளத்தில் வடிவெடுக்கிறபொழுது சிருஷ்டிக்கர்த்தாவாகிய பிரம்மதேவனுடைய பதவியும் மிக அல்பமானது என எனக்குத் தோன்றுகிறது. வேற்றானுடைய மனைவியைப்பற்றிய எண்ணம் அப்பொழுது எனக்கு எப்படி உண்டாகப் போகிறது! கீழ்த்தரமான செயலின் பொருட்டு அந்த மேலான மூர்த்தியின் வடிவத்தை நான் எப்படி எடுக்க முடியும்?

மனிதன் புரிகிற வழிபாடு, ஆத்மசாதனம் ஆகியவைகள் ஒரே குறியின் பொருட்டு நிகழ்த்தப்படுகின்றன. உலக பந்த பாசத்தை ஒழிப்பதே அக்குறியாகும். சாதகன் ஒருவன் பகவத்தியானத்தில் ஆழ்ந்து மூழ்குதற்கேற்ப இவ்வுலகுக்குரிய அல்பப் பொருள்களில் ஆசை தானாக அகன்று போகிறது. ஈசனுடைய தாமரைத் திருவடிகளில் பக்தி வைப்பதற்கேற்ப இவ்வுலகில் சுகஜீவனத்தைப்பற்றியும் அதற்குரிய அல்ப வஸ்துக்களைப் பெறுவதைப் பற்றியும் நாட்டம் தானாக மறைந்துபட்டுப் போகிறது. பண்பட்டுள்ள மேலானவனொரு

வன் பிறர் மனைவியைப் பெற்றெடுத்த தாய்க்கு நிகராகக் கருதுகிறான். மேலும் அன்னவன் தன்னுடைய மனைவியையே பாரமார்த்திகப் பெருவாழ்வுக்குரிய துணையெனக் கருதுகிறான். சாதனத்தில் மேல் நோக்கிச் செல்லுகிறவன் விலங்குத் தன்மையான ஆசைகளை விட்டொழிக்கிறான். அன்னவன் தெய்விக இயல்புகளை வளர்க்கிறான். நல்ல ஆத்மசாதகனொருவனுக்கு இவ்வுலகுக்குரிய ஆசை ஏதும் உள்ளத்தில் இடம் பெறுவதில்லை. அத்தகையவன் பிராரப்த கர்மத்தை முன்னிட்டுப் பற்றற்றவனாக இவ்வுலகில் வாழ்ந்திருக்கிறான். அத்தகையவனை ஜீவன் முக்தன் என்று சொல்லவேண்டும். ஸ்ரீ கிருஷ்ண சைதன்யருடைய சிஷ்யர்களில் பெரும்பான்மையோர் குடும்பஸ்தர்களாயிருந்தார்கள். ஆயினும் உலகப்பற்று எதற்கும் அவர்கள் அடிமைப்படவில்லை.

ஆயிரக்கணக்கான மேற்கோள்களை வேதாந்த தரிசனத்தினின்று பக்தன் ஒருவனுக்கு எடுத்து ஓதலாம். உலகம் வெறும் கனவு என்று வேண்டியவாறு அவனுக்கு வியாக்யானம் செய்யலாம். அச்சொற்கள் யாவுக்கும் பக்தன் செவிசாய்க்கிறான். ஆனால் தான் படைத்துள்ள கடவுள் பக்தியினின்று அவன் இம்மியளவும் பிசகியவனல்லன். பக்தி பூணுவது வெறும் பிராந்தி என்று வேண்டியவாறு அவனுக்கு எடுத்து விளக்கிச் சொல்லலாம். அச்சொற்களையெல்லாம் கேட்ட பிறகும் பக்தி மார்க்கத்தினின்று அவன் சிறிதும் பிசகுவதில்லை. பக்தியின் மகிமை அத்தகையது. சிவனுடைய விபூதியில் ஒரு சிறிதளவாவது வாய்க்கப் பெற்றவனாகப் பிறப்பெடுக்கிற மானுடனொருவன் இயல்பாக ஞானமார்க்கத்தில் ஈடுபடுகிறான். இவ்வுலகம் அவனுக்கு ஒரு கனவுபோன்று தென்படுகிறது. அதில் பற்று ஏதும் அவன் வைப்பதில்லை. பரம்பொருள் ஒன்றே நித்தியவஸ்து என்னும் எண்ணத்தில் அவன் ஆழ்ந்து ஊறியிருக்கிறான். மற்று இதற்கு மாறாக மகாவிஷ்ணுவின் விபூதியில் ஏதேனும் ஒரு சிறுபகுதியாவது வாய்க்கப் பெற்றவனாகப் பிறப்பெடுக்கிற மனிதனுக்கு பகவத் பக்தி மேலோங்குகிறது. அந்தப் பக்தி மார்க்கத்திலேயே அவன் ஆனந்தப் பரவசமடைந்தவனாக இருக்கிறான். அவன் படைத்துள்ள பக்தியை யாராலும் அசைத்துவிட முடியாது. இடையிடையே பக்தியினின்று பிசகுபவன் போன்று அவன் தென்படலாம். தத்துவ விசாரத்தில் கருத்தைச் செலுத்துகிறபொழுது அவன் அப்படிக் காட்சி கொடுக்கிறான். பின்பு ஆராய்ச்சியை ஒரு முடிவுக்குக் கொண்டுவந்த பிறகு பக்திமார்க்கத்தில் ஆயிரம் மடங்கு மேலோங்கியவனாக அந்நெறியில் அவன் செல்லுகிறான்.

இதுகாறும் பரமஹம்சதேவருடைய அறையிலே அமர்ந்திருந்த பக்தர்கள் அவரிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுச் சென்றார்கள். அதன் பிறகு மகிமசரண் ஹஸ்ராவை பரமஹம்சதேவரின் அறைக்குள்ளே அழைத்து வந்தார். அப்பொழுது மகேந்திரர் ஆங்கு இருந்தார். பரமஹம்சதேவரிடம் மகிமசரண் விண்ணப்பித்ததாவது: "ஐயனே தங்களிடம் நான் தெரிவித்துக்கொள்ளும் குறைபாடு ஒன்று உள்ளது. இந்த ஹஸ்ராவை தன் வீட்டுக்குத் திரும்பிப் போகும்படி தாம் ஏன் இயம்பினீர்கள்? வீட்டுக்குத் திரும்பிப்போய் குடும்ப வாழ்வு வாழும் நாட்டம் இவருக்கில்லை."

பரமஹம்சதேவர்: "இந்த ஹஸ்ராவின் தாயானவள் ராம்லாலாவிடம் ஏராளமாக முறையிட்டிருக்கிறாள். ஹஸ்ரா தம் வீட்டினின்று வெளியேகியதன் விளைவாக அவள் எத்தனையோ கஷ்டங்களுக்கு ஆளாகியிருக்கிறாள். ஆகையால்தான் சில நாட்களுக்காவது ஹஸ்ரா தன் வீட்டுக்குத் திரும்பிப்போய் தாய் படுகிற இன்னல்களினின்று அவளை விடுவிக்க முயல வேண்டும் என்று நான் சொல்லுகிறேன். பெற்ற தாயை எத்தனை எத்தனையோ இன்னல்களில் ஈடுபடுத்திவிட்டுத் துறவியாக வெளியே கிளம்புகிற ஒருவன் ஆத்மசாதனங்களில் முன்னேற முடியுமா? நான் பிருந்தாவனத்துக்கு யாத்திரை போயிருந்தேன். அங்கேயே நிரந்தரமாக நிலைத்துவிடலாம் என்னும் எண்ணம் என் உள்ளத்தில் உருவெடுத்தது. தக்ஷிணேசுவரத்தில் வசித்துவந்த என் தாயைப் பற்றிய எண்ணம் அடுத்தபடியாக உள்ளத்தில் உதித்தது. அப்பொழுது எனக்கு நான் இயம்பிக்கொண்டதாவது, 'நான் இங்கேயே தங்கிவிட்டால் என் தாய் கண்ணீர் சிந்திக் கதறி அழுவாள்.' ஆதலால் மதுரநாத் விசுவாசரோடு

நான் தக்ஷிணேசுவரத்திற்குத் திரும்பி வந்து சேர்ந்தேன். இக்கோட்பாடு ஒருபுறம் இருக்கட்டும். ஹஸ்ராபோன்ற ஞானி ஒருவர் உலகக் கடமைகளை ஒழுங்காக நிறைவேற்றுது பின் வாங்குவானேன்? கடமைகளை முறையாக நிறைவேற்றுவதற்கு அஞ்சுவானேன்?

மகிமசரண்: (புன்னகை பூத்தவராக) ஐயனே இந்த ஹஸ்ராவானவர் உண்மையிலேயே ஒரு ஞானியாயிருப்பாராகில் தாம் கிளப்பும் கேள்வி மிகப் பொருத்தமானதே.

பரமஹம்சதேவர்: (புன்னகை பூத்தவராக) இந்த ஹஸ்ராவானவர் அனைத்தையும் அடையப்பெற்றவராகத் தம்மைக் கருதிக்கொள்கிறார். அப்படி விளம்பரமும் பண்ணிக்கொள்கிறார். அவருக்குக் குழந்தைகள் சிலர் இருக்கிறார்கள். கொஞ்சம் கடன் பட்டிருக்கிறார். அதைப்பற்றிய உணர்வு உள்ளத்தில் ஒரு புறம் அவரை உறுத்திக்கொண்டிருக்கிறது. அவருடைய பாங்குக்கு உவமானமாக உலகத்தவர் இயம்பும் பழமொழி ஒன்றை எடுத்துக் கூறலாம். 'என் அத்தை ஆரோக்கியம் நிறைந்தவராக இருக்கிறார். இடையிடையே படுத்தபடுக்கையாகக் கிடக்கும் குறை ஒன்றுதான் அவரிடத்து உளது.'

மகிமசரண்: "ஐயனே இதுவே ஹஸ்ராவின் நிலைமை என்றால் அவரை ஒரு ஞானியென்று கூறுவதற்கு இடம் எங்கே?"

பரமஹம்சதேவர்: (புன்னகை பூத்தவராக) 'ஓ அவருடைய போக்கு உமக்குத் தெரியாது! ஹஸ்ராவானவர் மாண்புமிக வாய்க்கப் பெற்ற மானுடர் என்று எல்லாரும் இயம்புகின்றனர். தக்ஷிணேசுவர ஆலயத்தோட்டத்தில் வசித்து வரும் துறவியென்று அவரைப் போற்றுகின்றனர். மேற்போக்காகப் பார்க்கிறவர்களுக்கு அவர் பெருமை மிக வாய்க்கப்பெற்றவராகத் தென்படுகிறார். அத்தகைய சான்றோர் வசித்து வரும் இந்த ஆலயத்தில் என் போன்றவர்களைக் கண்ணெடுத்துப் பார்ப்பதற்கு ஆள் எங்கே?'

(எல்லாரும் நகைக்கின்றனர்)

ஹஸ்ரா: "ஐயனே தாம் ஒப்பு உயர்வு அற்றவர். தம்மோடு சீர்தூக்குவதற்கு இவ்வுலகில் வேறு யார் இருக்கிறார்! தாம் யாண்டும் அதீத நிலையில் இருப்பதால் தம்மை உலகத்தவர் அறிந்துகொள்வதில்லை.

பரமஹம்சதேவர்: "தாம் சொல்லுவது முற்றிலும் மெய். அதீத நிலையிலிருந்துகொண்டு என்னை எவ்விதத்திலும் விளம்பரப்படுத்தாது நான் மறைந்திருக்கிறேன். சீர்தூக்கிப் பார்க்க முடியாத மானுடனொருவனோடு யாரும் இணக்கம் கொள்ள முடியாது. ஆதலால்தான் என்னைப் பற்றிய பேச்சு மக்களுக்கிடையில் எழுவதில்லை."

மகிமசரண்: "ஐயனே இவருடைய தரம் இப்பொழுது விளங்குகிறது. தம் சொற்படி நடந்துகொள்ள இவர் கடமைப்பட்டிருக்கிறார்."

பரமஹம்சதேவர்: "அப்படியல்ல. இவரையே தாம் கேட்டுப்பாரும். இவர் என்னிடம் இயம்பியதாவது, 'தாங்களும் நானும் ஒரே பாங்குபடைத்தவர்களாக இருக்கிறோம்."

மகிமசரண்: "இவர் வீண் பேச்சு வீரர்."

பரமஹம்சதேவர்: "இடையிடையே இவர் எனக்கும் பாடம் புகட்டுகிறார். (எல்லாரும் சிரிக்கின்றனர்) மிகைபட இவர் வாயாடுகிற பொழுதெல்லாம் நான் இவரைத் திரஸ்கரிப்பதுண்டு. பிறகு நான் தனியனாக இருக்கிற பொழுது இவரை ஏன் இப்படிக் கண்டித்தேன் என்று எனக்குள்ளேயே நான் எண்ணிக்கொள்வதுண்டு. திரஸ்கரித்ததற்கு ஈடாக நான் இவரிடம் சென்று வணங்கி இன்சொல் சொல்கிற பொழுது இவர் மகிழ்வுறுகிறார். அது எனக்கும் மன அமைதியை உண்டு பண்ணுகிறது."

(ஹஸ்ராவைப் பார்த்து) "சுத்த சைதன்யத்தைத் தாம் ஏன் ஈஸ்வரன் என்று அழைக்கின்றீர்? சுத்தசைதன்யம் கிருத்தியங்கள் எதிலும் ஈடுபடுவதில்லை. ஜாக்ரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளுக்கும் அது சாட்சியாயிருக்கிறது. பஞ்ச கிருத்தியங்களாகிய சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அனுக்ரஹம் ஆகியவைகளில் சுத்த சைதன்யம் ஈடுபடுங்கால் அப்பொழுது அவரை நான் ஈஸ்வரன் என்று அழைக்கிறேன். சுத்த சைதன்யம் எத்தகையது என்பது கேள்வி. அது ஓர் ஊசிக்கு நெடுந்தூரத்திற்கு அப்பாலிருக்கும் காந்தத்திற்கு நிகர். அதன்கண் ஊசி கவர்ந்திழுக்கப்படுகிறது. ஆனல் காந்தமோ அசைவற்று செயலற்று இருக்கிறது.

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

385. முந்திக்கு வித்தான
மோனக் கரும்பு வழி
நிந்தித்திட விளைந்த
தேனே பராபரமே.

முக்தி என்பது விடுதலை. ஜீவாத்மன் பிரபஞ்சத்தின் கூறுகளாகிய உடல், உள்ளம் ஆகியவைகளினின்று விடுதலை அடைவது முக்தியாம். முக்திக்குப் பக்குவமாய்க்கொண்டிருக்கும் பாங்கு இக்கண்ணியில் இயம்பப்படுகிறது. மோனக் கரும்பு என்னும் கூற்றில் கருத்து மிகப் புதைந்திருக்கிறது. மனம் கூத்தாடும்பொழுது அது சொல்லாகப் பரிணமிக்கிறது. மானுடன் ஒருவன் பேச்சைப்பெருக்குதற்கேற்ப அவனிடம் அசாந்தி அதிகரிக்கிறது. பேச்சைக் குறைப்பதற்கேற்ப அமைதி வாய்க்கிறது. மனம் ஒடுங்கி வரும்பொழுது எண்ணங்கள் குறைகின்றன. அதைத் தொடர்ந்து பேச்சும் பின்னணிக்குப் போகிறது. பேச்சற்ற நிலையில் ஆனந்தம் இருக்கிறது. அதற்குச் சான்று அயர்ந்த உறக்கம். அயர்ந்த உறக்கத்தில் மனதுக்கு வேலையில்லை. அது ஒடுங்கிப் பின்னணியில் கிடக்கிறது. அதன் விளைவாகத் தூங்குகிற ஜீவன் ஆனந்தத்தில் திளைத்திருக்கிறான். இந்த ஆனந்தம் கரும்புக்கு நிகர். உடல் ஆரோக்யமாக இருக்கிறபொழுது அதைப்பற்றிய உணர்வு மனிதனுக்கு உண்டாவதில்லை. நோய்களுள் கொடிய நோய் காமநோய். அதற்கு ஆளாகும் மானுடன் என்னென்ன விதங்களில் உடல் உணர்வில் திணறுகிறான் என்பது வெளிப்படை. நோய்வாய்ப்பட்டிருக்கிறபொழுது உடலைப்பற்றிய உணர்வே முன்னணியில் நிற்கிறது. அவ்வுணர்வு துன்பமயம். உடல் உணர்வினின்றும், உள்ளத்தின் செயல்களினின்றும் விலகி நிற்பதற்கேற்ப ஆனந்தம் ஓங்குகிறது. ஆனந்தம் பிரம்மம் என்பது வேதவாக்கு. ஆனந்தத்துக்கு ஈண்டு தேன் அறிகுறியாக அமைந்துள்ளது. பரவித்தைக்கு மது வித்யா என்பது மற்றொரு பெயர். மது என்னும் சொல் தேனைக் குறிக்கிறது. முக்திக்கு ஆயத்தமாய்க் கொண்டு வரும் ஆத்ம சாதகன் உடல் உணர்வினின்றும் உள்ளத்தின் சலனத்தினின்றும் படிப்படியாக விடுதலையடைந்து வருகிறான். அந்த விடுதலைக் கேற்ப அவனுடைய நிஜசொருபமாகிய ஆனந்தம்தானாக முன்னணிக்கு வருகிறது என்னும் கோட்பாடு இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

386. நித்திரையும் பார்த்த
நினைவுமற்று நிற்பதுவோ
சுத்தஅருள் நிலை நீ
சொல்லாய் பராபரமே.

நித்திரையில் இரண்டு கூறுகள் இருக்கின்றன. அவைகள் முறையே சொப்பனவஸ்தை, சுஷுப்தி அவஸ்தை என இயம்பப்படுகின்றன. சொப்பனவஸ்தையில் ஸ்தூலதேகம் செயலற்றுக் கிடக்கிறது. ஆனால் சூட்சும சரீரமாகிய உள்ளம் ஏதேதோ உலகங்களைக் கற்பனை பண்ணிக்கொள்கிறது. இன்ப துன்பங்களையும் அது வரவழைத்துக் கொள்கிறது. ஆதலால் சொப்பனவஸ்தை ஜாக்ரதாவஸ்தைக்கு நிகர். பிரபஞ்ச வாழ்வின் பாங்குகள் எல்லாம் இவ்விரண்டு அவஸ்தைகளில் இருக்கின்றன. பின்பு சுஷுப்தி அவஸ்தையில் மனம் ஒடுங்கிக்கிடக்கிறது. அப்பொழுது அகவுலகும் இல்லை; புறவுலகும் இல்லை. ஆயினும் ஆத்மன் தன்னுடைய நிஜநிலையாகிய ஆனந்தத்தில் திளைத்திருக்கிறான். தமோகுணத்தின் ஆதிக்கத்தால் அந்த ஆனந்தம் மூடப்பட்டிருக்கிறது. ஆயினும் அது அழிந்துபோவதில்லை. இது ஜீவர்கள் எல்லாருடைய அனுபவம். இனி ஜாக்ரதாவஸ்தையில் மனதினுடைய கூத்தாட்டத்தைக் குறைப்பதற்கேற்ப அமைதியும் ஆனந்தமும் மேலிடுகின்றன. மனதை அறவே ஒழித்துப் பாழ்படுத்துவது வாழ்க்கையின் முடிந்த குறிக்கோள். மனதற்ற நிலையைப் பரிசுத்தமான நிலையெனத் தாயுமானவர் மற்றொரு இடத்தில் தெரிவிக்கிறார். மனது ஒடுங்கியிருக்கும் நிலைக்கு சுஷுப்தி என்று பெயர். மனது ஒதுக்கப்பட்டிருக்கும் நிலைக்கு சமாதி என்று பெயர். சமாதி, சுஷுப்தி ஆகிய இரண்டு நிலைகளிலும் கால, தேச, நிமித்தமில்லை. ஆனால் அக்ஞான மயமாயிருக்கிற சுஷுப்தி நிலைக்குப் போகிற மனிதன் பழையபடி கட்டுண்டவனாகவே அத

னின்று விழித்து எழுந்திருக்கிறன். ஆனல் சமாதி நிலைக்குப் போகிற மனிதன் அக்ஞானத்தை அறவே ஒதுக்கிவிட்டு நிறைஞானியாக மாறுகிறன். சமாதி எத்தகையது என்பதை ஒவ்வொரு ஜீவனும், தான் தான் அனுபவிக்கும் சுஷுப்தியினின்று யூகித்துக்கொள்ளலாம். நிரந்தரமாக மனதை ஒதுக்கித் தள்ளுவது வாழ்க்கையின் குறிக்கோள் என்னும் கோட்பாடு இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

**387.** மன்னும் மறிகடலும்
மற்றுளவும் எல்லாம் உன்
கண்ணில் இருக்கவும்
நான் கண்டேன் பராபரமே.

மறிகடல்—அலைவீசிக்கொண்டிருக்கும் கடல்; பரவஸ்துவும் அதில் தோன்றி, இருந்து, ஒடுங்குகின்ற பிரபஞ்சமும் ஒருவிதத்தில் இன்று நாம் கண்டுவரும் திரைப்படஅமைப்பை ஒத்திருக்கின்றன. திரை நிரந்தரமானது. அதில் தென்படும் படக்காட்சிக்குத் துவக்கமும் இருப்பும், ஒடுக்கமும் உண்டு. இப்படக் காட்சியில் திரை வேறு, அதன்மீது ஆரோபிக்கப்படும் படம் வேறு. வெளிச்சமும் இருளும் மயமாக படம் அதன் மீது மற்றெரு யந்திரத்தினிடத்திருந்து ஏற்றப்படுகிறது. ஆனல் பரம்பொருள் என்னும் அறிவுப் பெருவெளி தன்னருளால் தன்னிடத்திருந்தே பிரபஞ்சத்தையும் உயிர் வகைகளையும் தோற்றிக் கொள்கிறது. தோற்றத்து வந்துள்ள ஜகத்தும், ஜீவனும் பின்பு அந்தப் பரத்துக்குள்ளேயே ஒடுங்குகின்றன. ஆயினும் பரத்தின்கண் எந்தவிதமான விகாரமும் உண்டாவதில்லை. இதை அனுபூதியில் அறிந்து கொள்ளுதல் வாழ்க்கையின் குறிக்கோள் என்பது இக்கண்ணியில் அடங்கியிருக்கிறது.

**388.** பூட்டிவைத்து வஞ்சப்
பொறிவழியே என்றனை நீ
ஆட்டுகின்றதேதோ
அறியேன் பராபரமே!

பொறிகளில் கட்டுண்டு இருப்பவன் ஜீவாத்மா. பொறிகள் ஐந்து உள. அவைகளின் துணைகொண்டு பிரபஞ்சம் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் எனப் புலப்படுத்தப்படுகிறது. ஐம்பொறிகளை ஒதுக்கிவைத்தால் பிரபஞ்சம் மறைந்துபட்டுப்போகிறது. அயர்ந்த உறக்கமே இதற்குச் சான்று. உறக்கத்தில் அடைகிற இந்நிலையை சாதனத்தின் வாயிலாக சாத்தியப்படுத்துவது வாழ்க்கையின் குறிக்கோள். பொறிகளை வென்றவனுக்கு மெய்க்காட்சி மிக எளிது. பொறிகளுக்கு அடிமைப்பட்டிருக்கிறவன் பிரபஞ்சக் காட்சியில் திணறிக்கொண்டிருக்கிறன். இந்த மயக்கத்தில் அவன் அகப்பட்டுக் கொண்டிருப்பது அதிசயமன்றே என்பது இக்கண்ணியின் கருத்து.

**389.** பொய்யுணர் வாயிந்தப்
புழுக்கூட்டைக் காத்திருந்தேன்
உய்யும் வகையும்
உளதோ பராபரமே.

மானுடனெருவன் தன்னந்தனியனய், ஓர் அறையில் தாளிட்டுக்கொண்டு படுத்துறங்கினன். மங்கலான விளக்கொன்று அவ் அறையினுள் எரிந்து கொண்டிருந்தது. படுத்தவன் கனவு கண்டான். கனவில் பகைவன் ஒருவனைச் சந்தித்தான். இருவருக்கிடையில் காரசாரமான பேச்சு. பிறகு கைகலந்தார்கள். எதிரி வாளால் இவனை நெஞ்சில் ஓங்கிக் குத்தினன். வாள் நெஞ்சைப் பொத்துக் கொண்டு முதுகுப்பக்கம் வெளியே வந்தது. 'செத்தேன்' என்று சொல்லிக்கொண்டு வீழ்ந்தான். கனவின் வேகத்தால் காலை ஓங்கித் தரையில் அடித்தான். தூக்கத்தினின்று அவன் எழுந்தான். அடிபட்ட காலை தடவிக்கொண்டான். நெஞ்சை தடவிப்பார்த்தான். வாளால் அது குத்தப்படவில்லை, தான் சாகவில்லை, எதிரி அறைக்குள் இல்லை. தான் இருந்தது உறுதியாயிற்று அது ஸத்சொரூபம். அங்நிலை அறியப்பட்டது. அது சித்சொரூபம். அங்நிலை அவனுக்குத் திருப்தியைக் கொடுத்தது. அது ஆனந்தசொரூபம். ஸத்சித் ஆனந்தம் மனிதனுடைய நிஜசொரூபம். இதை அடைதற்கு எண்ணரிய பிறவிகள் இன்னும் கனவுகளின் வாயிலாக மனிதன் முயன்று வருகிறன். பிறகு ஆத்மபோதம் வாய்க்கிறபொழுது கனவுகளனைத்தும் அடிபட்டுப் போகின்றன. எண்ணரிய பிறவிகளை எடுத்து அவன் பண்ணுகிற ஆராய்ச்சிகள் நீண்டதொரு கனவு. அக்கனவினின்று விழித்துக் கொள்ளுதல் ஆத்மபோதம். ஆத்ம போதத்தில் மனிதன் நிரந்தரமான உய்வு அடைகிறன் என்பது இக்கண்ணியின் கருத்து.

(முற்றும்)

# அருள் நெறி

**( ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சிஷ்யரான சுவாமி அபேதானந்தரின் போதனை )**

நீ உணர்ச்சிக்கு வசப்படக்கூடாது. நீ உணர்ச்சியைக் கட்டுப்படுத்திப் பழகவேண்டும். உணர்ச்சிவசப்படுகிறபொழுது தளர்ச்சி ஏற்பட்டு ஊக்கம் குன்றுகிறது. சிலர் சில சமயம் ஏற்படுகின்ற உணர்ச்சிக்கு வசப்பட்டு வீட்டைத் துறந்து வெளியேறி விடுவார்கள். அவ்வுணர்ச்சி தணிந்ததும் குடும்ப பந்தபாசம் அவர்களுக்கு வந்துவிடும். திடீரென்று வாழ்க்கையில் வந்தமையும் கஷ்டங்களைச் சமாளித்துப் பழகவேண்டும். புயல்காற்று அடிக்கும்பொழுது மரங்களின் உச்சிகள் எல்லாம் படாதபாடு படுகின்றன. எத்தனையோ புயல் காற்றுகள் அடித்தாலும் மரங்கள் எல்லாம் அவற்றை ஏற்றுக்கொண்டுதானிருக்கின்றன. வாழ்க்கையில் வரும் கஷ்டங்களை அம்மரங்கள் போன்று நீ ஏற்றுப் பழகவேண்டும். பொறுமை கடலினும் பெரிது என்பது கோட்பாடு. பொறுமையையும் சகிப்புத்தன்மையையும் கடைப்பிடித்துப் பழகுவதன் மூலம் நீ மன உறுதிப்பாட்டை வளர்க்கின்றாய். எத்தகைய கஷ்டங்கள் வந்தாலும் மனம் சஞ்சலத்துக்கு உள்ளாகக்கூடாது. மனம் சஞ்சலப்படாது அமைதியோடு இருந்து கஷ்டங்களைச் சமாளிக்கவேண்டும். உலகத்தவர்கள் புகழ்ச்சியிலும் இகழ்ச்சியிலும் பொருள் ஒன்றுமில்லை. பரம்பொருளைப் போற்றிப் புகழ்வதில் உனக்குப்பெரும் விருப்பம் உண்டாகவேண்டும். பரம்பொருளைப் புகழ்வதில் உன் மனம் ஈடுபட்டுவிடுமாகில் உன்னை உலகத்தவர்கள் புகழ்ந்தால் அப்புகழ்ச்சியை உன் மனம் வாங்கிக்கொள்ளாது. கடவுளைக் காணவேண்டும் என்ற பேராவல் ஏற்பட்டு அதற்காக உன் உள்ளம் உருகி அழவேண்டும். அப்பொழுது உலகத்தவர் உன்னை இகழ்ந்தால் அதைப்பற்றி நீ கவலைப் படமாட்டாய். ஸ்ரீ ராமகிருஷ்ணர் கடவுள் விஷயத்தில் பித்துப் பிடித்தவர் போன்று நடந்துகொண்டார். உலகம் அவரை பித்தர் என்று இகழ்ந்தது. ஆனால் அதைக்குறித்து அவர் கவலைப்படவில்லை. கடவுள் நாட்டமுடைய மனது உலக இகழ்ச்சிக்கும் புகழ்ச்சிக்கும் வசப்படாது நடுநிலையில் இருக்கிறது. பிறருக்கு நீ எவ்விதத்திலும் இடர் விளைவிக்கக் கூடாது. உலகம் உன்னை எவ்விதத்திலும் வருத்தப்படுத்த முடியாத நிலைக்கு உன் உள்ளத்தை உயர்த்திக்கொள். அப்பரையும், பிரஹலாதனையும் படாதபாடுபடுத்தினர். ஆனால் அவர்கள் இறைவன் சிந்தனையில் மூழ்கி யாண்டும் இன்பநிலையில் இருந்தார்கள். உறுதியும் தூய்மையும் வாய்ந்த மனதே உலக இன்ப, துன்பங்கள் இரண்டையும் சமனாகக் கருதுகிறது. அத்தகைய மனதைப் பெறுவதற்கு நீ சாதனைசெய்து வா.

அன்னை பராசக்தி டாம்பீகம் எதையும் விரும்புவதில்லை. ஆடம்பரமும், டாம்பீகமும் உலகத்தவர்களை மகிழ்விக்கும். தூய பக்தி ஒன்றுதான் அம்பிகையை மகிழ்விக்கும். தூய பக்தியுடன் நீ அம்பிகைக்கு எதைச் சமர்ப்பித்தாலும் அம்பிகை அதை மகிழ்வோடு ஏற்றுக்கொள்கின்றாள். இன்றைக்கு மக்கள் சாத்வீக பூஜையின் மகிமையை அறியாதவர்களாகவிருக்கின்றனர். பெருமிதமாகச் செலவுசெய்து பூஜை கொண்டாடுவதில் கருத்துச் செலுத்துகின்றார்கள். பொருள் செலவு செய்து ஆர்ப்பாட்டங்கள் செய்வதில் பகவானுடைய அருளைப் பெற்றுவிட முடியாது. அத்தகைய ராஜசீகமான வழிபாட்டு முறை நமக்குத் தேவை இல்லை. அமைதியோடு இருந்து சாத்வீகமுறையில் பக்தி செய்து பழகவேண்டும். இறைவனுடைய திருவடிக்கு அனைத்தையும் அர்ப்பணம் செய்துவிடு. நீ செய்யும் செயலுக்கு நீ கர்த்தா என்னும் எண்ணத்தை ஒழித்துவிடு. கர்ம பலனை இறைவனிடம் ஒப்படைத்துவிடு. அப்பொழுது உன் மனது சாந்தி அடையும். ஜபமும் தியானமும் முறையே நிகழ்ந்து வரவேண்டும். ஜபம், தியானம் பண்ணுவதற்காகத் தனி இடம் நாடிப் போகவேண்டியதில்லை. நீ இருக்கும் இடத்திலிருந்துகொண்டே ஜபம், தியானம் செய்து வரலாம். இரவு நேரம் இயற்கை அமைதியோடு இருப்பதால் அது ஜபம், தியானங்களுக்கு ஏற்றநேரமாகிறது. நித்திரைக்குப் போகுமுன் ஜபம் செய்துவிட்டு நித்திரைக்குப் போகலாம். படுக்கையைவிட்டு எழுந்

திருக்கும்பொழுதும் ஜபம் செய்து எழுந்திருக்கலாம். அப்பொழுது உன்னை யாரும் தொந்தரவுபடுத்தமாட்டார்கள். நீ எங்குச்சென்ருலும் உன் மனம் உன்னிடம் வந்துகொண்டே இருக்கும். மனம் மாசுடையதாக இருக்கும்பொழுது நீ கர்மம் செய்துதான் ஆகவேண்டும். கர்மத்தின் மூலமாகத்தான் மனதைச் சுத்தப்படுத்த வேண்டும். மனம் தூய்மையாகும்பொழுது தான் ஞானேதயம் ஏற்படுகிறது. யக்ஞ கர்மங்களை நீ வேண்டியவளவு செய். யக்ஞ கர்மம் செய்யப்படும்பொழுதுதான் உன் மனம் தூய்மையடைகிறது. இதில் ஐயம் இல்லை.

குடியிருக்கும் வீட்டுக்கு வாடகை தருவது போன்று உடலுக்கு வரும் நோயை அனுபவிப்பதன்மூலம் உடலில் வசித்திருப்பதற்கு நாம் வாடகை செலுத்துகிருேம். உடல் நோய்க்கு உள்ளாகும்பொழுது "நான் ஆத்ம சொரூபம். ஆத்மா நோய்க்கு உள்ளாவதில்லை. எனவே நானும் நோய்க்கு ஆட்படமாட்டேன்" என்று ஆழ்ந்து நினைக்கவேண்டும். உடல் நோய் வாய்ப்பட்டிருக்கும்பொழுது உள்ளம் தெய்வச் சிந்தனையில் இருக்குமானல் அது பாராட்டுதற்குரிய நிலையாகும். உடலுக்கு வரும் நோய் உள்ளத்தைப் பாதிக்காதிருக்கவேண்டும். ஆத்மச் சிந்தனை ஓங்கி வந்தால் உடல் நோயையும் பொருட்படுத்தாது இருந்து பழகமுடியும். நான் ஆத்ம சொரூபம். ஆத்ம சொரூபத்துக்கு நோய் இல்லை என்று ஆழ்ந்து எண்ணுகின்ற பொழுது உடல் நோய் விரைவில் குணமாகிறது. நோயைப்பற்றியே நினைத்துக்கொண்டிருந்தால் உடலும் உள்ளமும் பாதிக்கப்படுகின்றன.

வீட்டில் பூஜை அறை அமைத்துக்கொள். அதில் உன் இஷ்ட தெய்வத்தின் உருவத்தை வைத்து நாள்தோறும் வழிபாடு செய்து வா. இஷ்ட தெய்வத்தின் அருளால் அனைத்தும் நிகழ்ந்து வருகின்றன என்பதில் நம்பிக்கை வை. இஷ்ட தெய்வத்தின் நாமத்தைப் பக்தியோடு ஜபம்செய்து வா.மந்திரத்தைச் சொல்லிக்கொண்டே பூஜை செய்து வா. இஷ்ட தெய்வத்தின் வடிவத்தை நாள்தோறும் சிறிது தியானம் செய்து பழகு. பூஜைக்கு எளிதில் அகப்படக்கூடிய புறப்பொருள்களை வைத்துக்கொள். புறப்பொருள்கள் இல்லாவிட்டாலும் மானசீக பூஜை செய்து பழகு. மனதில் இஷ்டதெய்வத்தின் உருவத்தை நினைத்து அவ்வடிவத்துக்கு அபிஷேக ஆராதனை செய். உள்ளம் உருகி பக்திப்பாடல்களைப் பாடி வா.

அதிகாலையில் எழுந்திருந்து பழகவேண்டும். அதிகாலை நான்கு மணியிலிருந்து சூரிய உதயம் வரையிலும் உள்ள நேரம் பிராம்ம முகூர்த்தமாகிறது. அப்பொழுது இயற்கை எங்கும் சத்துவ குணம் ஓங்கியிருக்கிறது. அந்த நேரத்தில் வழிபாடு செய்தால் உன்னிடத்திலும் சத்துவ குணம் ஓங்கும். அதிகாலையில் எழுந்திருந்ததும் வழிபாட்டுடன் வாழ்க்கை துவங்க வேண்டும். அங்ஙனமே வழிபாட்டுடன் வாழ்க்கை முடிய வேண்டும். ஒவ்வொரு நாளும் செய்த கர்மங்களின் பலன்களை அந்நாளின் முடிவில் இறைவனுடைய திருவடிக்கு அர்ப்பணித்து விடவேண்டும். "ஈசா! நான் இன்று செய்த செயல்களை எல்லாம் உனக்கு அர்ப்பணிக்கின்றேன்; நீ உன்னை எனக்குக்கொடு" என்று மனமுருகிப் பிரார்த்தனை செய். உனக்கு அமைந்த கடமைகள் தெய்வப்பணிவிடைகள் என்பதை நீ யாண்டும் ஞாபகத்தில் வைத்துக்கொள். அக்கடமைகளைச் செய்வதன் மூலம் தெய்வத்துக்குப் பணிவிடை செய்வதாக நினைத்துக்கொள். வேலைக்காரன் தனக்கு அமைந்த காரியத்தைச் செய்து விட்டுக் கவலையற்று இருப்பது போன்று உனக்கு அமைந்த கடமைகளை இறைவனுக்காகச் செய்யும் பொழுது நீயும் கவலையற்றிருக்கலாம். கர்ம பலனைத் தெய்வத்தினிடம் ஒப்படைப்பதுதான் கவலையற்றிருப்பதற்கு உபாயம் என்பதை அறிந்துகொள். கடவுள் சிந்தனையுடன் எழுந்திருந்து, கடவுள் சிந்தனையுடன் உனக்கு அமைந்த கடமைகளைச் செய்து கடவுள் சிந்தனையுடன் உறங்கப் போவாயானல் நீ தினசரி வாழ்க்கையைச் செம்மையாக நடத்தி வருபவனகின்ருய். வாழ்வைப் பற்றிய ரகசியத்தையும் கர்மத்தைப்பற்றிய ரகசியத்தையும் அப்பொழுது அறிந்தவனகின்ருய். அத்தகைய வாழ்க்கை வாழ்வதன்மூலம் உலக வாழ்க்கையில் அகப்படாது சுதந்தர புருஷனக இவ்வுலகத்தை விட்டு வெளியேறுவாய். அத்தகைய வாழ்வைத்தான் சுதந்தரவாழ்வு என்று சொல்லலாம்.

---

# அம்பிகையின் மகிமை

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் 1970ஆம் ஆண்டு திருப்பராய்த்துறை தபோவனம் சக்திபூஜை அந்தர் யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

[ 94 ஆம் பக்கத் தொடர்ச்சி ]

உடல் தோற்றத்தைப் பார்த்து மனிதனை நாம் அடையாளம் கண்டு பிடிக்கின்றோம். மனிதன் போன்று இருப்பதை வானரம் என்கின்றோம். வானரம் என்றால் இது நரனா? என்பது பொருள். மனிதனுக்கு ஒருபடி மேலே சென்று மனிதன் போன்று தென்படுவதைக் கின்னரம் என்கின்றோம். கின்னரம் என்றாலும் இது நரனா? என்பது பொருளாகும். உடல் அமைப்பை முன்னிட்டு மக்களை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம். ஆசியாக்கண்டத்தின் மேற்குப் பகுதியிலும், ஐரோப்பாவிலும் வசிப்பவர்கள் ஒரே வகுப்பைச் சேர்ந்தவர்களாகின்றனர். அவர்களைக் காகேசியன் பிரிவினர் என்று அழைப்பது ஐதிகம். ஆசியாக்கண்டத்தின் கிழக்குப்பகுதியில் வசிப்பவர்கள் மங்கோலியப் பிரிவைச் சேர்ந்தவர்களாகிறார்கள். ஆப்பிரிக்காவிலும்,அமெரிக்காவின் சில பகுதிகளிலும் வசித்திருப்பவர்கள் நீக்ரோ வகுப்பைச் சேர்ந்தவர்களாகிறார்கள். உடல் அமைப்பையும் அவயவங்களின் அறிகுறிகளையும்கொண்டு இந்த மூன்று வகுப்பினரை எளிதில் பாகுபடுத்திவிடலாம். இனி, குரங்கினம் மக்கள் விலங்குகளுக்கிடையில்இருக்கிறது. சில விலங்கினங்கள் சில துறைகளில் மனிதனைவிட மேலான அறிவு படைத்தவைகளாக இருக்கின்றன. ஒரு நிலையில் இருக்கிற உடல் பரிணமித்து மற்றொரு நிலைக்கு வருகிறது. இந்நிகழ்ச்சி இயற்கையில் ஓயாது நடந்து வருகிறது. பண்பட்ட நிலை வருகிறபொழுது உடலை ஒதுக்கித்தள்ளுகின்ற நிலைவருகின்றது. உடலைச் சரியாகப் பொருள் படுத்துவது சக்தி உபாசனையாகும். கிருஷ்ண பரமாத்மா ஒருநிலையில் இதை விளக்குகின்றார். நாணல் புல் இனத்தைச் சேர்ந்தது. அதைக் கொண்டு புல்லாங்குழல் செய்யப்படுகிறது. புல்லாங்குழலில் சில துவாரங்கள் போட்டுக் கண்ணன் அதை ஊதுகின்றார். கண்ணன் குழலோசையைக் கேட்ட உயிர்கள் யாவும் அவ்வோசைக்கு வசப்பட்டுவிடுகின்றன. புல்லாங்குழலைக் கீழே போட்டுக் காலில் மிதித்தால் ஒன்றுக்கும் உதவாத செத்தையாகப் போய் விடும். புல்லாங்குழல் வடிவில் வைத்து அதில் இசையைக் கிளப்பினால் உயிர்கள் இசைக்கு வசப்பட்டு விடுகின்றன. இதிலிருந்து ஒரு பொருளை உபயோகப்படுத்துவதை முன்னிட்டு அதற்குப் பெருமையோ சிறுமையோ வருகிறது என்பது தெரிகிறது. நமக்கு வாய்த்திருக்கும் க்ஷேத்திரம் அல்லது உடல் சாமானியமானதன்று. அது பெரிய காரியத்துக்கும் உதவும்; சக்தி வழிபாட்டுக்கும் உதவும். சரீரத்தின் மூலமாகச் சக்தியின் அனுக்கிரகத்தைப் பெறலாம். சரீரத்தின்மூலமாகப் பரத்தை அடையலாம். வீடு கட்டுவதற்குச் சாரம் பயன் படுகிறது. வீடுகட்டி முடித்தான பிறகு சாரத்தைக் கலைத்துவிடலாம். வீடுகட்டச் சாரம் பயன்படுவது போன்று பரத்தை அடைய இந்த உடல் பயன்படுகிறது. பரத்தை அடைந்தான பிறகு இந்த உடலை உகுத்துவிடலாம். மரத்தில் பறவை கூடுகட்டுகின்றது. அக்கூட்டில் முட்டை இடுகின்றது. அம்முட்டையைக் கூட்டுக்குள்ளிருந்து அது அடைகாக்கிறது. முட்டையிலிருந்து குஞ்சு வெளிவந்ததும் கொஞ்சகாலத்துக்குப் பறவை குஞ்சைப் பாதுகாக்கிறது. குஞ்சு பறக்கக் கற்றுக்கொண்டதும் தாய்ப் பறவையும் குஞ்சும் அக்கூட்டைவிட்டு வெளியேறிவிடுகின்றன. நம் உடல் கூட்டுக்கு நிகர் ஆகிறது. பரத்தை அடைவதற்கு இவ்வுடல் பயன்பட்டு வருகிறது. பரத்தை அடைந்தானதும் உடலைப் புறக்கணித்துவிடலாம்.

உடல் சொரூபமாக அம்பிகை இருக்கின்றாள். தத்துவத்தை உள்ளபடி அறிந்துகொள்ளாதவர்கள் சரீரத்துக்குச் சரியான விளக்கம் தந்தவர்களல்லர். 'காயமே இது பொய்யடா, காற்றடைத்த பையடா' என்பது அரைகுறை ஞானம். 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்' என்பது சரியான ஞானம்.

"உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்

உடம்புளே உத்தமன் கோயில்கொண்டான்என்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின் றேனே"

என்பது திருமூலர் வாக்கு. 'We are the temples of God' என்பது இயேசுநாதர் வாக்காகும். நம் உடல் பரம்பொருளுக்கு ஒரு ஆலயமாக இருக்கிறது. உடம்பை ஆலயமாகக் கருதி அதைப் பாதுகாத்து வரவேண்டும்.

'இந்த உடல் பொல்லாதது; இதற்கு உணவு கொடுக்காது இதை எலும்பும் தோலுமாகச் செய்யவேண்டும்.' இங்ஙனம் புத்தர் பெருமானுக்குப் பலர் புகட்டினர். அதைக் கேட்ட புத்தர் உடலைப் பட்டினி போட்டார். பட்டினி போட்டதால் அவர் உடல் வலிவிழந்து போய்விட்டது. அவர் ஒரு மரத்தடியில் படுத்திருந்தார். அப்பொழுது கல்யாண ஊர்வலம் ஒன்று அவ்வழியே சென்றது. அவ் ஊர்வலத்தினர் வீணையோடு பேசுவதுபோன்று அமைந்துள்ள ஒரு பாடலைப் பாடிக்கொண்டு சென்றார்கள். அப்பாடலின் கருத்தாவது : "ஏ! வீணையே! உன்னிடத்திலுள்ள நரம்புகளை அதிகமாகத் தளர்த்தி விட்டால் உன்னிடத்திலிருந்து ஓசை உண்டாகாது. அதற்கு மாறாக உன்னிடத்திலுள்ள நரம்புகளை முறுக்கினாலும் அவை தெறித்துப்போகும். நரம்புகளைத் தளர்த்தாமலும் முறுக்காமலும் நடுநிலையில் வைத்தால்தான் உன்னிடத்திலிருந்து இனிய ஓசையை உண்டுபண்ண முடியும்." இப்பாடல் புத்தர் காதில் வீழ்ந்தது. அதைக் கேட்டதும் அவருக்கு ஞானோதயம் வந்தது. வீணைக்கு நிகர் நம் உடல். கபிலவஸ்துவில் புத்தர் ராஜபோகத்தில் இருந்தபொழுது ராஜபோகத்தில் மூழ்கி உடலை உயர்ந்த லட்சியத்திற்கு உதவாததாகச் செய்துவிட்டார். ராஜ்ஜியத்தை விட்டு வெளியேறியதும் யாரோ சொன்ன பேச்சைக் கேட்டு உடலைப் பட்டினி போட்டு வாட்டி உடலை உயர்ந்த காரியத்திற்கு உதவாததாகச் செய்துவிட்டார். உடலை நடுநிலையில் வைத்திருந்தால் அது பெரிய காரியத்துக்கு உதவும் என்று அறிந்த பிறகு அவர் வாழ்க்கை வேறுபோக்கில் மாறியது. சரீரத்துக்குக் காயம் என்பது ஒரு பெயர். சரீரம் வெட்டுப்பட்டு விட்டால் காயமாகி விடுகிறது. அந்தக் காயத்தைக் கழுவி அதற்கு மருந்து போட்டுக் கட்டுப் போடுகின்றோம். வெட்டுப்பட்ட காயத்தைப் பக்குவமாகக் கவனிப்பதுபோன்று சரீரத்தையும் கவனமாகப் பாதுகாத்து வரவேண்டும். வீடுகட்டுபவர்கள் வீடு கட்டி முடியும் வரை சாரத்துக்கு வேண்டிய மரம், பலகைகளைப் பாதுகாத்து வைக்கின்றனர். தாய்ப் பறவை தன் குஞ்சு பறக்கக் கற்றுக்கொள்ளும் வரை கூட்டைப் பாதுகாத்து வைக்கின்றது. அங்ஙனம் நாம் அடைய வேண்டிய பெருநிலையை அடையும்வரை சரீரத்தைப் பாதுகாத்து வைக்க வேண்டும்.

சரீரத்திற்குத் துவக்கம் உண்டு; அதற்கு முடிவும் உண்டு. பராசக்தி சர்வகாலமும் க்ஷேத்திர சொரூபமாக இருக்கின்றாள். ஜீவனுடைய பரிபாகத்துக்கு ஏற்ற பிண்டத்தைத் தருகின்றாள். ஜீவன் அதை வைத்துக்கொண்டு பரிபாகம் அடைந்து கடைசியில் அதைப் புறக்கணித்துவிட்டு அதற்கும் அப்பால் போகின்றான். சரீரத்தைப் புறக்கணித்துத் தள்ளுவதைப் புத்தர் நிர்வாணம் என்று பகர்கின்றார். நிர்வாண நிலைக்குப் பரிபாகம் அடைகின்ற வரையிலும் சரீரம் தேவைப்படுகிறது. அதனிடத்துத் தெய்வீக இணக்கம் வைத்துப் பழகவேண்டும். உடல் சுகபோகத்துக்குரியதென்று அதனிடத்துப் பற்று வைப்பது தவறு ஆகும். அப்படிப் பற்று வைப்பவன் தன்னைத்தானே கெடுத்துக் கொள்கின்றான். சரீரம் அம்பிகையின் சொரூபம் என்று கருதுவது நல்ல ஆராதனையாகிறது. அம்பிகையின் அருளைப் பெறுவதற்காகச் சரீரம் அமைந்திருக்கிறது என்று எண்ணி அதனிடத்துத் தெய்வீக இணக்கம் வைப்பது சக்தி உபாசனையாகும். அத்தகைய இணக்கத்தின் மூலம் நம்மை நாம் உயர்த்திக்கொள்கின்றோம். பராசக்தி பிரபஞ்ச சொரூபமாக இருக்கின்றாள். அதற்கு முடிவு இல்லை. உயிர்களைப் பக்குவப்படுத்தித் தன் அவ்யக்த சொரூபத்துக்கு அவைகளை எடுப்பதை லட்சியமாகக் கொண்டிருக்கின்றாள். தாய் குழந்தைக்கு உடை போடுகின்றாள். உடை அழுக்கானதும் வேறொரு உடை அணிகின்றாள், குழந்தை வளரும்பொழுது உடல் பெரியதாகிறது. குழந்தையின் உடல் பெரியதாவதற்கு ஏற்ப உடையையும் பெரியதாக்குகின்றாள். இது உலக நடைமுறை. ஜீவன்

மின் நிலையிலிருந்து பரிணமித்து நிறைஞானி நிலைக்கு வருகின்றான். ஜீவன் அந்தந்த நிலைக்கு ஏற்ற சரீரங்களைப் பெற்றிருக்கின்றான். அந்தச் சரீரங்களை எல்லாம் ஜீவனுக்கு அம்பிகை தந்துகொண்டிருக்கின்றாள். ஜீவனுடைய நிலைக் கேற்ற சரீரங்களைக்கொடுத்துவரும் தாய் சரீரங் களைத் தாண்டியநிலைக்குப் போவதற்கும் 'துணை புரிகின்றாள். சிற்றுயிர்கள் சரீரங்களைச் சுக போகத்துக்காகப்பயன்படுத்துகின்றன.மானுட நிலைக்கு வந்துள்ள நாம் தெய்வ ஆராதனைக் காகச் சரீரத்தைப் பயன்படுத்தத் தெரிந்து கொள்ளவேண்டும். நாம் சரீரத்தைத் தெய்வ ஆராதனைக்காகப் பயன்படுத்தும்பொழுதுதான் சக்தி உபாசனை செய்தவர்களாகின்றோம். அம்பிகையினுடைய வழிபாட்டுக்காகச் சரீரங்களை நல்ல நிலையில் பாதுகாத்துவைப்பது அவசியமாகிறது.

நாம் சரீரத்தை எவ்வளவுக்கெவ்வளவு அம்பிகையின் ஆலயமாகக் கருதுகின்றோமோ அவ்வளவுக்கவ்வளவு சக்தி வழிபாட்டில் ஈடு பட்டவர்களாகின்றோம். ஜீவர்களுள் ஜடநிலை யில் சிலர் இருக்கின்றார்கள். அவர்களிடத்து உயிர் தோற்றத்துக்கு வராது தூங்கிக்கொண் டிருக்கிறது. உயிர் ஜடநிலையில் இருப்பதற்கு நமக்கு அமைகின்ற அயர்ந்த உறக்கம் சான்று கின்றது. அயர்ந்த உறக்கத்தில் சேதனம் ஒடுங்கி மறைந்து கிடக்கின்றது. விழித்தெழு கின்றபொழுது சேதனம் தோற்றத்துக்கு வரு கிறது. ஜடம் வேறு, சேதனம் வேறு அல்ல. ஜடசக்தியாகவும் சித்சக்தியாகவும் இருப்பது ஒன்றே. எனவேதான் அம்பிகைக்கு ஜடசக்தி என்றும் சித்சக்தி என்றும் நாமங்கள் அமைந் திருக்கின்றன. ஜடசக்தியாக இருப்பதுதான் சித்சக்தியாக மாறி அமைகிறது. தெய்வ வழி பாடு இடையறாது நிகழ்ந்து வருகிற இடத்துக் குப் புனிதம் வருகிறது. அந்த இடத்திலுள்ள ஜடப்பொருள்களிடத்துச் சேதனம் வளர்ச்சி அடைகின்றது. சில புண்ணியஸ்தலங்களுக் குப் போகின்றபொழுது ஆங்கு நம் மனது நம்மை அறியாது உயர்நிலைக்குச் செல்கின்றது. பகவத் சிந்தனை ஆழ்ந்து நிகழ்கின்ற இடத்தில் அருள் உண்டாகிறது. அத்தகைய அருள் நிறைந்த க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை செல்லு வது நல்ல ஆத்மசாதனம் ஆகிறது.

"மூர்த்திதலம் தீர்த்தம் முறையால் தொடங்கி
னர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்பது தாயுமானவர் வாக்கு. ஓர் இடத்தில் பிரதிஷ்டை செய்துவைக்கப்பட்ட விக்கிரகத்தி னிடத்து நாம் சேதனத்தைக் காணுகின்றவளவு அவ்விக்கிரகம் சேதனமாக மாறி அமைகின்றது. நதியைத் தெய்வ சொரூபமாக வைத்து வழிபடும் பொழுது அது சைதன்ய சொரூபமாகின்றது. கங்கா நதிக்குப் பிரம்மவாரி என்று பெயர். பிரம்மசைதன்யம்கங்காநதியினிடத்தில் அலாதி யாக மிளிர்ந்து கொண்டிருக்கிறது. பிருந்தாவன மண்ணிலும், பூரி ஜகந்நாதருடைய பிரசாதத்தி லும், கங்கா தீர்த்தத்திலும் பிரம்மசைதன்யம் இருப்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் தெளிவாகக் கண்டார். ஆகையால் அவர் அம்மூன்றையும் பிரம்ம மயமாகவே கண்டு வழிபட்டார்.

பிரபஞ்சத்தில் ஜடசக்தி சித்சக்தியாக மாறு வது அமைதியாக நிகழ்ந்து வருகின்றது. இந்தத் தத்துவத்தை அம்பிகை தன் சொரூபத் தில் விளக்குகின்றாள். பர்வத ராஜனுடைய புதல்விஎன்பது அம்பிகைக்குஒரு நாமம் உண்டு. பர்வதம் என்றால் கல் என்பது பொருள். கல் ஜடப்பொருளாகும். தவத்தின் மூலமாக ஜடப் பொருள் சேதனமாக மாறுகின்றது. பர்வத ராஜனுடைய புதல்வி பார்வதி இந்தியாவின் தென்முனையில் தவம் புரிகின்றாள். ஜீவர்கள் புரியவேண்டிய தவத்துக்கு அவள் எடுத்துக் காட்டாக இருக்கின்றாள். ஜீவர்கள் அறிவை வளர்ப்பதற்கு அறிந்தோ அறியாமலோ முயலு கின்றனர். அச்செயலை அறிந்து செய்யுமிடத்து முன்னேற்றம் விரைவில் வந்து அமைகின்றது. அச்செயலை அறியாது செய்யுமிடத்து அதற் கேற்ற முன்னேற்றம் உண்டாகின்றது. ஒரு வகையான வண்டுமல்லாந்து விழுந்தால் குப்புற விழத் தெரியாது திண்டாடுகிறது. அது தன் கால்களை நீட்டி நெடுநேரம் உதறுகின்றது. இறுதியில் குப்புற விழுவதில் வெற்றி பெறு கிறது. அப்படி அது எடுத்துக்கொள்கின்ற முயற்சி அது பரிணமித்து வருவதற்கு உதவு கின்றது. ஸ்தாவரம் இருந்த இடத்தில் இருந்து கொண்டு கிளைகளைப் பலதிசைகளிலும் அனுப்பு கின்றது. ஸ்தாவரம் தன்னை விரிவுபடுத்துவதற் காக அப்படிச் செய்கின்றது. அத்தகைய

முயற்சி அதனுடைய வளர்ச்சிக்குத் துணைபுரிகிறது. அறிவையும் ஆற்றலையும் வளர்ப்பதற்கு உயிர் எடுத்துக் கொள்ளும் முயற்சி தவம் ஆகிறது. உயிர்கள் அனைத்தும் தங்களை உயர்நிலைக்குக் கொண்டு வருவதற்கு முயல்கின்றன. பரவஸ்துவின் சொரூபம் சைதன்ய மாகும். அதை மனதில் வாங்குகின்றவளவு ஜடசக்தி மயமாகவிருக்கின்ற நாம் விரைவில் சித்சக்தியாக மாறி அமைகின்றோம். அம்பிகை சிவத்தைக் குறித்து ஆழ்ந்து தியானம் பண்ணுகின்றாள். ஜடசக்தி தவத்தின் மூலம் சித்சக்தியாக மாறி அமைகிறது என்பதை அம்பிகை சிவனை நோக்கிச் செய்யும் தவம் விளக்குகிறது. இராமாயணத்தில் இராமன் திருவடிபட்டதும் கல் பெண்ணாக மாறுகிற சம்பவம் ஒன்று நிகழ்கிறது. இதுவும் ஜடசக்தி சித்சக்தியாக மாறி அமைகின்ற தத்துவத்தை விளக்குகிறது. சத்சங்கத்தின் மூலமாக ஜீவனிடமுள்ள ஜடம் சித்தாக மாறுகிறது என்பதை அகல்யை பெண்ணாக மாறிய சம்பவம் விளக்குகிறது. சத்சங்கத்தில் ஈடுபடுகின்றவளவு நம்மிடமுள்ள ஜடநிலையை ஒதுக்கிவிட்டுச் சேதன நிலையை அடைகின்றோம். நம்மிடத்துச் சேதன நிலையை வளர்ப்பதற்கேற்ப நாம் விரைந்து முன்னேற்றமடைகின்றோம். நாம் நம்மையே ஆராய்ச்சி பண்ணவேண்டும். நாம் எத்தகைய மனநிலையில் இருக்கின்றோம், எதை நாடுகின்றோம் என்பது நம்மை ஆராய்ச்சி பண்ணினால் விளங்கும். நெல்குத்துபவர்கள் குத்துவதற்கிடையில்குத்தப்பட்டதைக் கையில் எடுத்து ஊதிப்பார்க்கின்றார்கள். இன்னும் எவ்வளவு நெல் இருக்கிறது, எவ்வளவு நெல்அரிசியாக மாறி இருக்கிறது என்பது அப்பொழுது தெரியும். நாம் செய்கின்ற சாதனத்தை இடையிடையே விமர்சனம் செய்து பார்த்தால் எவ்வளவு தூரம் நம் சிந்தை பாரமார்த்திகத்தில் செல்லுகிறது, எவ்வளவு தூரம் லௌகிகத்தில் செல்லுகிறது என்பது விளங்கும். சிந்தை பாரமார்த்திகத்தில் அதிகம் சென்றால் நாம் விரைந்து முன்னேறி வருகிறோம். ஜடமாக இருக்கின்ற பிரபஞ்சத்தில் மனம் திருப்தி அடைகின்றபொழுது நம் வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை இருக்கிறது. அதற்கேற்ற முயற்சி எடுத்து முட்டுக் கட்டையைத் தகர்த்தெறிய வேண்டும். விரைந்து மேலேபோவதும் இடைவெளியில் நெடுங்காலம் தடைபட்டிருப்பதும் அவரவர்களுடைய முயற்சியைப் பொறுத்திருக்கிறது. ஜடசக்தி சொரூபமாக இருக்கின்ற நாம் சித்சக்தி சொரூபமாக மாறி அமைவது மனோவேகம்போன்று விரைவில் அமையலாம்; அல்லது அப்படி மாறி அமைவது மெதுவாகப் பலகோடி பிறவிகளுக்குப் பிறகு அமையலாம். அதற்குக் கால வரையறை இல்லை. ஜீவன் எடுத்துக்கொள்கின்ற முயற்சிக்கு ஏற்ப முன்னேற்றம் வேகமாகவோ மெதுவாகவோ அமைகின்றது. ஏற்கனவே பக்குவமடைந்துள்ள உள்ளம் விரைவில் முன்னேற்றம் அடைகின்றது. உயரத்திலிருந்து கல் ஒன்றைக் கீழே போடும்பொழுது ஆரம்பத்தில் அதன் வேகம் குறைவாகவும், நேரம் ஆக ஆக அதன் வேகம் அதிகமாகவும் இருக்கிறது. அது போன்று ஜீவன் பக்குவம் ஆக ஆகப் பரத்தை நோக்கிச் செல்லும் வேகம் அதிகரிக்கிறது. மலையின் குழந்தையாக இருந்த பார்வதி சிவத்தை மணந்து சிவசொரூபமாகின்றாள். இது புரான பூர்வமாகப் பர்வதராஜனுடைய குமாரி சிவ சொரூபமாக ஆனாள் என்று கூறப்பட்டிருக்கிறது.

அம்பிகை பிரபஞ்சத்தை அமைத்து வைத்திருக்கின்றாள். கீழ்நிலையிலிருக்கின்றபூச்சி நிலையிலிருந்து இறுதி நிலையிலுள்ள பிரம்மாவரை உள்ள உயிர்களை எல்லாம் அம்பிகை தோற்றுவித்து வைத்திருக்கின்றாள். உயிர்களுள் உச்ச நிலையில் இருப்பவன்பிரம்மதேவன் ஆகின்றான். ஜகத் ஜனனியாக இருக்கும் அம்பிகை பிரம்ம தேவன் நிலையிலுள்ள ஜீவனையும், புழு பூச்சிகளாக இருக்கின்ற ஜீவன்களையும் தோற்றுவிக்கின்றாள். தூங்குகின்ற ஒருவனையும், பிணம் ஒன்றையும் ஆராய்ந்தால் அவ்விரண்டுக்கும் வேற்றுமைகள் தென்படும். தூங்குகிறவன் முகத்தில் இருக்கும் எழில் பிணத்தின்முகத்தில் இருக்காது. தூங்குகின்றவனிடத்தில் சுவாசிப்பதன் அறிகுறி இருக்கும். தூங்கும்பொழுது சிலர் அமைதியாக தூங்குகின்றார்கள். சுவாசம் மெதுவாகப் போய்வந்து கொண்டிருக்கும். அவர்களுள் சிலர் தூங்கும்பொழுது உரக்கக் குறட்டை விட்டுத் தூங்குவார்கள். தூங்குகின்றவன் சிறிது நேரத்தில் புரண்டுபடுப்பான். ஆனால் பிணம் புரண்டு படுக்காது. தூங்கு

பவன் ஜடம் போன்று கிடந்தாலும் அவன் ஜடப்பொருளல்லன். ஸ்தாவரங்கள் அசையா திருந்தாலும் அதில் உயிர்த்தத்துவம் இருக் கிறது. உயிர் உள்ளது எது? உயிர் அற் றது எது? என்பதை அதனிடத்துத் தென் படும் அறிகுறிகளைக்கொண்டு அறியலாம். உயிரற்ற பிரேதம் மற்றவுயிர்களுக்கு உணவா கின்றது. இது சரீரத்தைப் பற்றிய ஒரு சிறப்பு ஆகும். நிலத்திலிருக்கிற பாக்டீரியா நெல் லுக்கு உணவாகிறது. மக்கள் நெல் என்னும் தானியத்தை உணவாகக் கொள்கின்றனர். கால்நடைகள் வைக்கோலை உணவாகக் கொள் கின்றன. மக்களைவிட மேல்நிலையில் போகின்ற வர்களுக்கு எண்ணமே உணவாகின்றது. ஜீவ கோடிகளின் தொகை பிரம்மதேவன் ஆகின்ருன். பிரம்மதேவன் சங்கல்பத்தால் அந்நிலைக்கு வந் திருக்கின்ருன். இத்தனை சரீரங்கள் மூலமாக அவன் உணவு உட்கொள்கின்ருன். மேலும் அவனுடைய சங்கல்பமே அவனுக்கு உண வாகின்றது. பண்பட்டு யோகத்தில் மேலே போகின்றவர்களுக்கு அருள் நாட்டமே உணவாகின்றது. அருள் நிலையில் இருக் கின்றவர்களுக்குத் தெய்வத்தைப் பற்றிய எண்ணமே மேலான உணவாகின்றது. நாட்டை முன்னிட்டு மொழியை முன்னிட்டு மக்களுக்கிடையில் ஏற்றத்தாழ்வுகள் ஏராள மாக இருக்கின்றன. மரணத்துக்குப் பின் சரீரத்தைப் பூமியில் புதைத்த பிறகு அச்சரீரம் உயர்குடியில் பிறந்தது அல்லது தாழ்ந்த குடி யில் பிறந்தது என்ற வேற்றுமை இல்லாது எல்லாச் சரீரங்களும் புழு, பூச்சிகளுக்கு உண வாகின்றன. பண்பாட்டில் ஜீவன் மேல் நிலைக்கு வர வரச் சரீரமும் மாறி அமைகின்றது. புல்லாக இருக்கின்ற ஜீவனுக்கு ஒரு சரீரம், புழு, பூச்சிகளாக இருக்கின்ற ஜீவர்களுக்கு அவைகளுக்கேற்ற சரீரங்கள், விலங்குகளாக இருப்பவைகளுக்கு அவைகளுக்கேற்ற சரீரங் கள் அமைந்திருக்கின்றன. மூளையை ஆராய் கின்றவிடத்துச் சரீரத்துக்கேற்ற மூளை அமைவ தில்லை. மனிதனுடைய சரீரம் சிறியது; யானை யினுடைய சரீரம் பெரியது. மனிதனுக்கு அமைந்துள்ள மூளை யானைக்கில்லை. ஜீவன் படிப்படியாக மேல்நிலைக்கு வரும்பொழுது மூளையும் வளர்ச்சி அடைகிறது. ஜீவனுடைய உடல் அமைப்பைக் கொண்டு பரிணமத்தில் அந்த ஜீவன் எந்த நிலையை அடைந்திருக் கிருன் என்பதை அறிந்துகொள்ளலாம். பூமி யிலிருந்து வெட்டி எடுக்கின்ற எலும்புகளை ஆராய்ந்து அவ்வெலும்புகளையுடைய ஜீவன் எத்தகையவன் என்பதை அறிகின்ருர்கள். மானுட சரீரம் சரீர அமைப்பில் உச்சநிலைக்கு வந்திருக்கிறது. இறைவனுடைய சிருஷ்டியில் மானுட சரீரம் மிக அற்புதமானது. பௌதிக விஞ்ஞானிகளும், ஞானிகளும் அவ்வுண் மையைக் கண்டறிந்திருக்கின்றனர். மனிதன் ஓர் இயந்திரத்தைக் கண்டுபிடித்திருக்கின் ருன். அந்த இயந்திரம் மூளை செய்கின்ற வேலைகளை எல்லாம் செய்கின்றது. மூளை படைத்த மனிதனல் அந்த யந்திரம் செய்யப் பட்டதே அந்த யந்திரத்துக்குரிய சிறப்பாகும். மலாய் நாடு போயிருந்தபொழுது ஓர் அச்சகத் திறப்புவிழாவில் கலந்துகொள்ள நேர்ந்தது. அங்குப்பேசின பேச்சை ஒரு சிறுவன் டைப் செய்தான். அது ஒரு காகிதத்தில் துவாரங்களாக விழுந்தது. அக்காகிதத்தை எடுத்து யந்திரத்தில் செலுத்தினர்கள். அப் பேச்சு அச்சாகி அந்த யந்திரத்திலிருந்து வெளி வந்தது. இது மிகவும் அற்புதமான தென்று பாராட்டினேம். அந்த யந்திரத்துக்கு மூளை இல்லை என்று பதில் சொன்னர்கள். மூளை படைத்த மனிதன் அந்த யந்திரத்தை அங்ஙனம் அமைத்திருக்கின்ருன். மூளை படைத்தவனுடைய சித்சக்திக்கு ஜடசக்தி அடிமையாக வேலை செய்கிறது. ஈசனுடைய சிருஷ்டியில் மானுட மூளைக்கு நிகரான ஒன் றைக் காணமுடியாது. இச் சிருஷ்டி அம்பிகை யின் பெரிய செயல் ஆகிறது. அம்பிகையின் இம் மகிமையை அறிகின்றபொழுது அது சக்தி பூஜை ஆகிறது. புழுமுதல் பிரம்மா பரியந்தம் உள்ள ஜீவர்களில் எத்தனையோ படித்தரங்கள் இருக்கின்றன. அத்தனை படித்தரங்களி லுள்ள உயிர்களை எல்லாம் அம்பிகை உண் டாக்கி அவைகளை இயக்கி வருகின்ருள். உயிர் களைக் காப்பாற்றுவதும், அழிப்பதும் அம்பிகை யினுடைய செயல்களாகின்றன. இது அம்பிகை யினுடைய மகிமையாகும். இம் மகிமையில் நம் மனம் ஆழ்ந்து மூழ்குமானல் அது நல்ல சக்தி பூஜை ஆகிறது. (தொடரும்)

# சுவாமி துரியானந்தர் ஜீவிதம்

(109ஆம் பக்கத் தொடர்ச்சி)

சுவாமி துரியானந்தர் மேல்நாட்டுச் சிஷ்யர்களுக்குச் சமயப் பயிற்சியைச் சிறந்த முறையில் அளித்தார். ஒருநாள் சாந்தி ஆச்ரமத்தில் இருந்த சிஷ்யர்கள் தாங்கள் ஆச்ரமத்துக்கு வருவதற்கு அடிப்படையாக இருந்த காரணங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவ்வமயம் சுவாமி துரியானந்தர் அவர்கள் முன் எழுந்தருளினர். புனித வாழ்க்கையை மேற்கொள்வதற்குக் காரனம் எதுவாக வேண்டுமென்றாலும் இருக்கட்டும். அதைப்பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை. புனித வாழ்க்கையில் நீங்கள் ஈடுபடுகின்றவளவு புனிதமுடையவர்களாகிறீர்கள். கங்கையின் புனிதத்தை அறிந்து அதில் இறங்கி நீராடினாலும் சரி, பிறர் தள்ளிவிட்டு நீராடினாலும் சரி நீங்கள் கங்கையில் நீராடியவர்களாகிறீர்கள். அஃதேபோன்று புனித வாழ்க்கையை மேற்கொள்பவனிடத்துள்ள பாபம் நாசமாகிவிடும். விஷப்பாம்பு ஒருவனைத் தீண்டிவிடுமாகில் அவன் மரணமடைவான். அவ்விதமே புனித ஆத்மாக்களுடைய பார்வை நம் பாபத்தை நாசமாக்கிவிடும். வேதாந்தத்தை நீங்கள் சரியாக அறிந்துகொள்வீர்களானால் சமயத்தின் சாரத்தை அறிந்துகொண்டவர்களாகிறீர்கள். பூரணச் சந்திரனைப் பார்க்கின்றவர்களுக்கு மெழுகுவர்த்தி அவசியமில்லை. அங்ஙனம் வேதாந்தத்தை அறிந்தவனுக்கு வேறு மதம் எதுவும் தேவை இல்லை.

சிறு செயலாக இருந்தாலும் அச்செயலை வழிபாடாகக் கருதிச் செம்மையாகச் செய்ய வேண்டும் என்று சுவாமி துரியானந்தர் தம் சிஷ்யர்களுக்குப் போதித்தார். ஒரு சமயம் சுவாமி துரியானந்தருடைய பேச்சைக் குறிப்பு எடுத்துக்கொண்டிருந்த சிஷ்யர் ஒருவருடைய எழுதுகோலைக்கவனித்தார். அவ்வெழுதுகோல் கூரான கத்தியால் சீவப்படாததால் தாறுமாறாகச் சீவப்பட்டு மழுங்கிக் கிடந்தது. சுவாமிகள் அவ்வெழுதுகோலை வாங்கி நேர்த்தியான முறையில் கூரான கத்திகொண்டு சீவி கூர்மைப்படுத்திக் கொடுத்தார். இது மற்றவர்களுக்கு அரியபாடமாக அமைந்தது. காலத்தைப் பயன்படுத்துவதில் கண்ணும் கருத்துமாகச் சுவாமிகள் இருப்பார். நாளை செய்யவேண்டிய காரியத்தை இன்றே செய்யவேண்டும் என்றும், இன்று செய்யவேண்டிய காரியத்தை இக்கணமே செய்யவேண்டும் என்றும் கூறுவார். காரியத்தை ஒத்திப் போடுவதற்கு அனுமதிக்க மாட்டார்.

மேல்நாட்டவர்கள் ஆரோக்கியத்துடனும், செல்வாக்குடனும், ஒழுக்கத்துடனும் இருப்பது வாழ்வின் லட்சியம் என்று எண்ணி வந்தார்கள். புதுக் கருத்து எதையும் அவர்களுடைய உள்ளத்தில் எளிதில் புகுத்திவிட முடியாது. அவர்களுக்குச்சுவாமிகள் பகர்ந்ததாவது: "நல்லவர்களாக இருப்பதே உயர்ந்த லட்சியம் என்று நீங்கள் கருதுகிறீர்கள். ஆனால் இந்தியர்கள் முக்தியைத்தான் வாழ்வின் லட்சியமாகக் கருதுகிறார்கள். நீங்கள் பாபத்தில் நம்பிக்கை உடையவர்களாக இருக்கிறீர்கள். புண்ணியம் செய்தால் போதும் என்று எண்ணுகிறீர்கள். ஆனால் இந்தியர்கள் அக்ஞானம் என்ற கேடு உள்ளது என்றும் அக்கேட்டை ஞானத்தைக்கொண்டு அழிக்க வேண்டுமென்றும் பகர்கின்றனர். ஞானம் பெறுவதுதான் முக்தி என்கின்றனர். ஏசுநாதர் பகர்ந்ததாவது: "மெய்ப்பொருளை அறியுங்கள். மெய்ப்பொருள் ஞானம் உங்களை சுதந்திரர்களாக ஆக்குகின்றது."

சாந்தி ஆச்ரமம் நகரச் சூழ்நிலையைவிட்டு ஒதுங்கி இருந்தது. ஆச்ரமத்தைப் பார்ப்பதற்கு அடிக்கடி அன்பர்கள் வந்து போய்க்கொண்டு இருந்தனர். சாந்தி ஆச்ரமம் மக்களைத் தன்பால் இழுத்தது. சிலர் ஆச்ரமத்தில் என்ன நடக்கின்றது என்பதை அறிவதற்கு ஆவலாய் வந்தனர். இன்னும் சிலர் ஆச்ரம வாழ்க்கையில் பங்குகொள்வதில் ஆவலாய் வந்தனர். ஒரு சமயம் ஓர் அம்மையார் அங்கு வந்தார். கையில் அக்னிமூட்டுவதற்கு உரிய சுள்ளிகளோடு வந்தார். சுவாமியைப் பார்க்க அவ்வம்மையார் அனுமதிக்கப்பட்டார். சுவாமி துரியானந்தர் முன் சுள்ளிகளை வைத்து அவ்அம்மையார் சுவாமிகளுக்கு வணக்கம் செய்து அமர்ந்தார். அவ்வம்மையாருடைய பணிவையும் அன்பையும் சுவாமிகள் மிகவும் பாராட்டி

ஞர். பழைய காலத்தில் கையில் சமித்துடன் தான் பெரியோர்களைப் பார்க்கப்போவார்கள். அவ்வம்மையாருடைய செயல் பழங்காலத்தை நினைவூட்டுவதுபோல் இருந்தது.

ஒருசமயம் சாந்தி ஆச்ரமத்திற்கு ஓர் இளைஞன் வந்திருந்தான். அவன் சித்திகளில் நாட்டமுடையவனாக இருந்தான். ஆச்ரம வாழ்க்கையில் மற்றவர்களோடு இணைந்து செயலாற்ற அவன் விரும்பவில்லை. அவன் தனக்காகக் கொடுக்கப்பட்ட அறையில் தனித்திருந்து அவன் போக்கில் சாதனைசெய்துவந்தான். அத்தகையவனுக்கும் சாந்தி ஆச்ரமத்தில் இடம் உண்டென்பதை சுவாமிகள் அமைதியாக இருப்பதன் மூலம் எடுத்துக்காட்டினர். அவ்விளைஞன் ஒருசமயம் சுவாமிகளைப் பார்த்து, "ஆத்மசாதகன் நெறிவழுவிப் போய்விடுவானாகில் அவன் என்ன ஆவான்" என்று கேட்டான். அவன் அம்பிகையினுடைய அணைப்பிலிருந்து விலகிப் போகமாட்டான். வழுவியதிலிருந்து மீண்டு எழுந்து மறுபடியும் சாதனையில் முன்னேற முயல்வான் என்று சுவாமிகள் பதில் தந்தார். சிறிதுநாட்கள் ஆச்ரமத்தில் அவன் இருந்தான். அதன்பிறகு அவனாகவே ஆச்ரமத்தைவிட்டு வெளியேறிவிட்டான். ஆச்ரமவாசிகள் வாழ்ந்ததவநெறியை அவனால் கடைப்பிடிக்க முடியவில்லை. எனவே அவன் ஆச்ரமத்தைவிட்டு வெளியேறிவிட்டான்.

சுவாமி துரியானந்தர் கட்டுப்பாடான வாழ்க்கை வாழ்வதில் கண்டிப்புடையவராக இருந்தார். ஒழுக்க நியதிகளைச் சிஷ்யர்களுக்குப் புகட்டினர். அவர் புகட்டிய ஒழுக்க விதிகளைத் தாமே அனுஷ்டித்து வந்தார். ஒவ்வொரு நாளும் காலை உணவுக்கு முன் பகவத்கீதை முழுவதையும் பாராயணம் செய்யும் பழக்கத்தை மேற்கொண்டு இருந்தார். இப்பழக்கத்திலிருந்து அவர் தவறுவது இல்லை. சில சமயங்களில் சிஷ்யர்களுடன் சுவாமிகள் உலாவச் செல்வார். ஒரு நாள் மாலை ஓர் உயரமான குன்றின்மீது சுவாமிகளும், சிஷ்யர்கள் சிலரும் ஏறினர்கள். ஆங்கு ஒரு மரத்தடியில் அமர்ந்தார்கள்.சுற்றுப்புறம் எங்கும் இயற்கை எழில் உள்ளத்தைக் கவர்வதாக இருந்தது. அன்னை பராசக்தி இயற்கைத் தோற்றத்தில் தன் மகிமையை விளக்கிக்கொண்டிருந்தாள். இயற்கையின் எழிலில் தம் மனதை ஈடுபடுத்திய சுவாமிகள் சிஷ்யர்களைப் பார்த்துப் பகர்ந்ததாவது: "அன்னை பராசக்தி தூய்மையே வடிவெடுத்தவள். அவள் தன்முன் திரை ஒன்றை வைத்திருக்கின்றாள். அவளுடைய அருளுக்குப் பாத்திரமானவர்களைத் தவிர மற்றவர்கள் அத்திரையை விலக்கி அவளைக் காண முடியாது. திரை மறைவிலிருந்துதான் அம்பிகையை மக்கள் பார்க்கின்றார்கள்." "அன்னைபராசக்தி எத்தகையவள்? அவள் எங்கே இருக்கின்றாள்?" என்று சிஷ்யர் ஒருவர் கேட்டார். "அவள் அங்கு இங்கு எனுதபடி எங்கும் எல்லாப் பொருள்களிலும் இருக்கின்றாள். அவள் இயற்கையில் ஊடுருவியும், இயற்கையாகவும் ஒளிர்கின்றாள். இப்படி வெறுமனே பேசுவதில் பயனில்லை. திரையை விலக்கி அவளைக் காணுங்கள்" என்றார் சுவாமிகள்.

**சிஷ்யர்:** "திரையை எப்படி விலக்க முடியும்?"

**சுவாமிகள்:** "தியானத்தின் மூலமாகத் திரையை விலக்கலாம். ஆழ்ந்து தியானம் செய்யுங்கள். நீங்கள் அம்பிகையினுடைய காட்சி பெறுவீர்கள்."

1901ஆம் ஆண்டில் சுவாமி துரியானந்தர் சாந்தி ஆச்ரமத்திலிருந்து சான்பிரான்ஸிஸ்கோ வந்து சேர்ந்தார். சாந்தி ஆச்ரமப் பணிகளை எல்லாம் ஒரு சிஷ்யரிடம் ஒப்புவித்தார். சான்பிரான்ஸிஸ்கோவில் தம் பணியைத் துவக்கினர். அவர் இரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு நாளும் காலை 10 மணியளவில் தியான வகுப்பு நடத்தினர். செவ்வாய், வியாழன் ஆகிய நாட்களில் அவர் பகவத்கீதை பற்றியும், ராஜயோகம் பற்றியும் சொற்பொழிவு செய்தார். கீதை வகுப்பு முடிந்ததும் கேள்விக்காக நேரம் ஒதுக்குவார். அக்கேள்வி நேரத்தில் பற்றுதல் என்றால் என்ன? என்பது ஒரு நாள் கேள்வியாகக் கேட்கப்பட்டது. நான், எனது என்னும் அஹங்கார மமகாரங்கள் பற்றுதல் ஆகின்றன என்று சுவாமிகள் பதில் கொடுத்தார்.

சான்பிரான்ஸிஸ்கோவில் இருந்த பொழுது சுவாமி துரியானந்தர் நோய்வாய்ப்பட்டார். அப்பொழுது அவருக்குப் பணிவிடை செய்வதற்கு ஓர் அம்மையார் அமர்த்தப்பட்டார். அவர் சுவாமிகளுடைய சிஷ்யை ஆவார். அவ்

வம்மையார் பக்தியோடு சுவாமிகளுக்கு உணவும் மற்ற உதவிகளும் செய்து வந்தார். சுவாமிகள் மிகவும் கண்டிப்புடையவராக இருந்தார். அவ்வம்மையாருடைய செயல்களில் குறைகளை எடுத்துக் காட்டிக் கொண்டு இருந்தார். சுவாமிகளுக்குப் பணிவிடை பண்ணுவதில் அவ்வம்மையார் மிகவும் சிரமப்பட்டார். சுவாமிகள் அவ்வம்மையாரைத் திருத்தி அமைப்பதற்காகக் கடுமையாக இருந்தார். ஆனல் அவ்வம்மையார் அதைப் புரிந்துகொள்ளவில்லை. நோய்வாய்ப்பட்டிருந்த பொழுது சுவாமிகள் எப்படி நடந்துகொண்டார் என்பதைப் பற்றி அவ்வம்மையார் பகர்ந்திருப்பதாவது: "சுவாமிகள் அடிக்கடி கோபித்துக் கொண்டார். என்னைப் பார்க்கும்பொழுதெல்லாம் அவர் கடுமையான மொழிகளைப் பகர்வார். மேனட்டுக்காரர்களாகிய உங்களுக்கு ஒன்றும் தெரியாது. நோயாளிகளை எப்படிக் கவனிக்க வேண்டும் என்பதற்கு உங்களுக்குப் பயிற்சி தந்திருக்கின்றூர்கள். ஆனல் அத்துறையில் பயிற்சியே பெருத எங்கள் நாட்டுப் பெண்கள் உங்களை விட நன்ருகப் பணிசெய்வார்கள். வைத்தியத் துறையில் பட்டம்பெற்ற உங்களைவிடப் படிப்பில்லாத எங்கள் பாட்டிமார்கள் சிறந்தவர்களாக இருக்கிருர்கள்." இப்படிச் சுவாமிகள் பேசிய பொழுது அவ்வம்மையின் உள்ளம் மிகவும் பாதித்தது. ஆகையால் அவ்வம்மையார் பகர்ந்ததாவது : "உங்கள் பாட்டிமார்களைப் பற்றி எனக்குத் தெரியாது. ஆனல் எங்கள் நாட்டில் நோயாளிகள் உங்களைக் காட்டிலும் பொறுமையாக இருப்பார்கள்."

"உங்கள் நாட்டு மக்கள் விளம்பரப் பிரியர்கள், புகழ்ச்சிக்கு அடிமைப்பட்டவர்கள். நீ என்னைப் புகழலாம் அல்லது இகழலாம். அதைக்குறித்து நான் கவலைப்படவில்லை. உன் பணியை நான் விரும்பவில்லை. நீ வேண்டுமென்ருல் போய் விடலாம். எனக்கு யாரும் தேவையில்லை" என்ருர் சுவாமிகள். இதைக் கேட்டதும் அவ்வம்மையார் தாம் பொறுமை இழந்து போனது குறித்து வருந்தினர். சுவாமிகளிடத்தில் அந்த அம்மையாருக்குப் பெருமதிப்பு இருந்தது. சுவாமிகளிடம் இப்படிப் பேசிவிட்டோமே என்ற வருத்தத்தால் கண்களில் நீரைப் பெருக்கினர். அவ்வம்மையாருடைய உள்ளம் மாறிவிட்டதையறிந்த சுவாமிகள் அன்போடு அவ்வம்மையாருடன் பேச ஆரம்பித்தார். "உன்னுடைய நலனுக்காகத்தான் நான் இங்ஙனம் கடுமையாக நடந்துகொண்டேன். நான் நோய்வாய்ப்பட்டிருப்பதோ ஆரோக்கியமாக இருப்பதோ முக்கியமானவையன்று. உங்களுடைய நன்மையை முன்னிட்டுத்தான் நான் இந்நாட்டுக்கு வந்திருக்கின்றேன்" என்று சுவாமிகள் பகர்ந்தார். சுவாமி துரியானந்தர் தம்மைப்பற்றிக் கவலைப்படமாட்டார். பிறருடைய நலத்திலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார். அந்த அம்மையாரிடம் கடுமையாக நடந்துகொண்டது அன்பின் விளைவு என்பதை அவ்வம்மையார் பின்னர் அறிந்துகொண்டார். அஹங்காரம் ஆணவம் உள்ளவர்களிடம் கடுமையாக நடந்துகொள்வதுபோல் காணப்படுவார். அவர்கள் திருந்தி அமைந்ததும் சுவாமிகள் அவர்களை நடத்தும் முறையும் திருந்தி அமைந்துவிடும்.

கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் மாறுபட்ட கருத்து உடையவர்களாக இருந்தார்கள். சுவாமிகளுடைய வேதாந்த வகுப்புக்கு மனைவி வந்துகொண்டிருந்தாள். ஆனல் கணவன் வருவது இல்லை. மனைவி வகுப்புக்கு வருவதற்கும் கணவன் தடைபோட்டார். கணவனுடைய மனப்போக்கை அவ்வம்மையார் சுவாமிகளிடம் தெரிவித்தார். "கணவன் சொற்படிதான் மனைவி நடந்துகொள்ளவேண்டும். ஆகையால் கணவனுடைய விருப்பத்திற்கு மாருக அடிக்கடி நீ இங்கு வரவேண்டாம். நீ அறிந்துகொண்ட விஷயத்தைக் கணவனுக்குத் தெளிவாக எடுத்துக்கூறு. அம்பிகையினிடம் பிரார்த்தனை செய்துகொள். நாளடைவில் எல்லாம் சரியாக அமைந்துவிடும்" என்று சுவாமிகள் அவ்வம்மையாருக்கு அறிவுறுத்தினர். அவ்வம்மையார் பேச்சை அவர் கணவன் காதுகொடுத்துக் கேட்பது இல்லை. ஆகையால் கணவனுடைய போக்கை அவ்வம்மையாரால் மாற்றி அமைக்க முடியவில்லை. சுவாமிகளே வலிய அவ்வம்மையார் வீட்டிற்குச் சென்று அவ்வம்மையாரின் கணவனின் கையைப்பிடித்துக் குலுக்கினர். சுவாமிகள் கைபட்டதும் அவருடைய மனம் முற்றும் மாறிவிட்டது. அன்று முதல் அவர்

சிறந்த பக்தராகிவிட்டார். கணவனும் மனைவியும் ஒருமித்த கருத்துடன் சுவாமிகளின் சீடர்களானார்கள்.

சான்பிரான்சிஸ்கோவில் வெறும் சொற்பொழிவு செய்ததைவிட அதிகமாகச் சுவாமிகள் தியான வகுப்புக்கள் நடத்தினர். தியானத்திற்கும் பிரார்த்தனைக்கும் முக்கியத்துவம் கொடுத்தார். நேருக்கு நேர் கடவுளைத் தரிசிப்பதன் மூலமாகவே உண்மையான ஆத்மஞானம் கிடைக்கிறது. நூல்களைப் படிப்பதன் மூலமாகவும், சொற்பொழிவுகளைக் கேட்பதன் மூலமாகவும் ஆத்மஞானம் பெற்றுவிடமுடியாது. இவ்வுண்மையைச் சிஷ்யர்களுடைய உள்ளத்தில் ஆழப்பதியும்படி செய்தார். பிராணயாமம் போன்ற யோகப் பயிற்சியையும் சிஷ்யர்களுக்கு அளித்தார். சான்பிரான்சிஸ்கோவில் இந்தச் சமயம் அவருடைய ஆத்மசக்தி மிகுந்த அளவில் செயலாக வெளிப்பட்டது. ஆடவன் ஒருவன் அழகுள்ள பெண்பால் ஒருத்தியை வசீகரசக்தியின்மூலம் தன் வசப்படுத்தி வைத்திருந்தான். அவர்கள் இருவரும் சுவாமிகளினுடைய வகுப்பிற்குவந்திருந்தார்கள்.சுவாமிகள்வகுப்பின் முடிவில் ஓம் சாந்தி, சாந்தி,சாந்தி என்று மும்முறை கூறினர். இவ்வார்த்தைகள் அந்த அம்மையின் உள்ளத்தில் மாறுதலை உண்டுபண்ணியது. அந்த அம்மையார் தன் உள்ளத்தை அவ் ஆடவனுடைய வசீகர சக்தியிலிருந்து விடுவித்துக் கொண்டார். இம்மாதிரியான வசீகர சக்திக்கு உட்படக்கூடாது என்று சுவாமிகள் அவ்வம்மையாருக்கு அறிவுரை கூறினர். மனதை மெய்ப்பொருள் தியானத்தில் ஆழ்ந்து ஈடுபடும்படி செய்து இத்தகைய தீயசக்திக்கு வசப்படாதிருக்கும் உள்வலிவைப் பெறவேண்டுமென்று சுவாமிகள் அவ்வம்மையாருக்கு எடுத்துக் கூறினர். உனக்கு இன்று முதல் சாந்தி என்ற நாமம் சூட்டுகிறேன். நீ சாந்த சொரூபமாக ஆவாய் என ஆசி கூறினர்.

இங்ஙனம் சான்பிரான்சிஸ்கோவைச் சுற்றிலும் ஆறு மாதகாலம் சுவாமி துரியானந்தர் வகுப்புக்கள் நடத்தியும், சொற்பொழிவுகள் செய்தும் வந்தார். அதன் பிறகு சாந்தி ஆச்ரமம் திரும்பி ஐந்து மாதகாலம் அங்குத் தங்கியிருந்தார். சுவாமிகள் சாந்தி ஆச்ரமத்தில் தங்கி இருந்து செய்த காரியங்கள் குருதாஸ் என்பவரால் நன்கு விளக்கப்பட்டு இருக்கின்றன. ஒரு சமயம் சுவாமிஜியினுடைய அறைக்குக் குருதாஸ் சென்றபொழுது சுவாமிகள் பரவசநிலையில் இருந்தார். குருதாஸைத் தமக்கு எதிரில் அமரும்படி சைகை செய்தார். இனிமையான குரலில் அவர் குருதாஸிடம் பகர்ந்ததாவது: "உங்களுக்காகத்தான் இந்தச் சாந்தி ஆச்ரமத்தை அமைத்திருக்கிறேன். நீங்கள் இங்கு மகிழ்ச்சியோடு இருங்கள். பராசக்தியின் குழந்தைகளாக ஆச்ரமத்திலேயே வாழ்ந்திருக்கின்றவர்களிடம் ஆச்ரமப் பொறுப்பு முழுவதையும் ஒப்படைக்கின்றேன். நான் உங்களுக்குச் சொல்லவேண்டியவற்றை எல்லாம் சொல்லி இருக்கிறேன். நான் உங்களிடத்தில் எதையும் மறைத்து வைக்கவில்லை. என் மனதில் உள்ள பரமரகசியங்களை எல்லாம் உங்களுக்குச் சொல்லிவிட்டேன். நான் இங்கு எவ்விதம் வாழ்ந்தேன் என்பதை நீங்கள் எல்லாரும் கவனித்து இருக்கின்றீர்கள். அத்தகைய வாழ்க்கையை நீங்களும் வாழ்ந்து வாருங்கள். அன்னை பராசக்தியை முற்றும் சார்ந்திருங்கள். அவளையே முற்றும் நம்பி இருங்கள். அவள் உங்களுக்கு வழிகாட்டுவாள். அவள் உங்களை ஒருகாலும் புறக்கணிக்க மாட்டாள். அதில் நான் மிகவும் உறுதியாக இருக்கின்றேன். யாரையும் முகஸ்துதி செய்யாதீர்கள். எல்லாரையும் சமமாகக்காணுங்கள். எல்லாரையும் சமமாக நடத்துங்கள். யாருக்கும் சலுகை காட்டாதீர்கள். எல்லார் சொல்லுவதையும் கேளுங்கள். எல்லாரிடமும் நியாயமாக நடந்து கொள்ளுங்கள். அனைத்துக்கும் அன்னை பராசக்தி பொறுப்பாகின்றாள். அம்பிகையினுடைய பணிக்கு உங்கள் வாழ்வை அர்ப்பணியுங்கள். நீங்கள் எதற்கும் அஞ்சவேண்டியது இல்லை.

"உண்மையாக இருந்து அன்னை பராசக்தியை யாண்டும் தியானம் செய்துவாருங்கள். அம்பிகையினுடைய நாமத்தைச் சொல்லிக்கொண்டு அருள்வீரர்களாக இருந்து பணியாற்றுங்கள். அழுக்காறு, அஹங்காரம், கோபம் முதலிய உணர்ச்சிகளை அடக்கிப் பழகுங்கள். ஒருவர் இல்லாதபொழுது அவரைப்பற்றிப் புறம் கூறாதீர்கள். நீங்கள் பேசும் ஒவ்வொன்றும் உண்மையாக இருக்கட்டும். செயல்வீரர்களாக இருங்கள். பற்றற்று இருங்கள். நீங்கள் என்ன செய்ய

வேண்டுமென்று விரும்புகின்றீர்களோ அதை நீங்களே செய்யுங்கள். உங்கள் வாழ்க்கை பிறருக்கு எடுத்துக்காட்டாக இருக்கட்டும். உங்களுடைய வாழ்வு பிறருடைய வாழ்வை உருவாக்கட்டும். சேவை! சேவை! சேவை! இது உங்களுடைய ஸ்லோகமாக இருக்கட்டும். இதுவே சிறந்த போதனையாகும். பணிவாக இருங்கள். யாவர்க்கும் பணியாளனாக இருங்கள். பிறருக்குப் பணிசெய்பவனே பிறரை ஆளத் தெரிந்துகொள்கின்றான். உங்கள் வாழ்க்கையின் மூலமும், புத்தகங்களைப் படிப்பதன் மூலமும் நீங்கள் பல விஷயங்களை அறிந்திருக்கின்றீர்கள். அவைகளைப் போதியுங்கள். இறைக்க இறைக்கக் கிணற்றில் ஜலம் ஊறுவது போன்று நீங்கள் பிறருக்குப் போதிக்கப் போதிக்க விஷயங்கள் உங்கள் உள்ளத்திற்கு வந்துகொண்டே இருக்கும். உடலால் உங்களை விட்டுப் பிரிவேன் எனினும் உள்ளத்தால் நான் உங்களிடமே இருப்பேன். நீங்கள் அம்பிகையினுடைய புதல்வர்கள். அம்பிகை உங்களுக்குத் தாயாவாள். அம்பிகை உங்களை யாண்டும் பராமரித்து வருவாள். நீங்கள் அம்பிகையின் கடமையை ஆர்வத்துடன் செய்து வாருங்கள்.''

சுவாமிஜியினுடைய உரையைக் கேட்டதும் அவர்கள் ஆனந்தமடைந்தார்கள். 1902ம்ஆண்டு சான்பிரான்ஸிஸ்கோவிலிருந்து இந்தியாவுக்குக் கப்பல் ஏறினர். சுவாமிகள் ஐக்கிய நாடுகளில் இரண்டு ஆண்டு ஒன்பது மாதங்கள் தங்கியிருந்தார். அவர் ஐக்கியநாட்டில் தங்கியிருந்த காலத்தில் ஒன்றரை ஆண்டுகள் சாந்தி ஆச்ரமத்தில் வாழ்ந்திருந்தார். அமெரிக்காவில் சுவாமிகளோடு இணக்கம் வைத்தவர்கள் எல்லாரும் சமயத்துறையில் நல்ல தூண்டுதல்கள் பெற்றார்கள். அவர்களுடைய உள்ளம் உயர்நிலைக்கு எடுத்துச் செல்லப்பட்டது. ஆன்மீகத்துறையில் சுவாமிகளிடமிருந்து அவர்கள் அடைந்த பலன் நிரந்தரமாக அவர்களுக்குஉரியதாயிற்று. அவர்களுடைய உள்ளத்தில் ஆத்மசக்தியைச் சுவாமிகள் எழுப்பினர். வாழ்விலும் மரணத்திலும் அவர்களுடைய உள்ளம் அசையாத ஆன்மீகநாட்டம் உடையதாக இருந்தது. சுவாமி துரியானந்தருடைய சிஷ்யைகளுள் சங்கரி என்னும் மாது ஒருத்தி இருந்தாள். அவள் சத்தியஞான சங்கத்தின் அங்கத்தினராக இருந்தாள். சுவாமி விவேகானந்தர், சுவாமி துரியானந்தர்களுடைய வேதாந்த உபந்யாசங்களைக் கேட்ட பிறகு அந்தச் சபையை விட்டு விலகிக் கொண்டார். அதனுடைய கொள்கை பரந்ததாக இல்லை. அது குறுகியகொள்கை உடையதாகவிருந்தது. எனவே அவ்வம்மையார் அதிலிருந்து விலகிக் கொண்டார். சுவாமி துரியானந்தரிடம் அம்மாது பெற்ற பயிற்சி அவளுக்கு வாழ்க்கை முழுவதும் பயன்பட்டது. மரண காலத்திலும் அப்பயிற்சி அவளுக்குத் துணையாக இருந்தது. சுவாமி துரியானந்தர் இந்தியாவுக்குத் திரும்பியபின் சங்கரி நோய்க்கு ஆளானாள். நோயினால் ஏற்பட்ட துன்பத்தை அமைதியோடு ஏற்றுக்கொண்டாள். ஒரு நாள் சங்கரி தன் தோழி மீராவிடம் பகர்ந்ததாவது: ''என்னைக் கடவுள் அழைக்கின்றார். அவருடைய நாமத்தை நீ ஓதுவாயாக.'' மீரா தன் தோழிக்குப் பக்கத்தில் அமர்ந்து நாள் முழுவதும் இறைவனுடைய நாமத்தை ஓதிக்கொண்டே இருந்தாள். சங்கரியினுடைய மற்ற தோழிகள் முறைவைத்துக்கொண்டு இரவு முழுவதும் கடவுளுடைய நாமத்தை ஓதிக்கொண்டிருந்தார்கள். மறு நாள் காலை சங்கரியினுடைய உடல் மிகவும் தளர்வுற்றது. சங்கரி தன் தலையைச் சிறிது தூக்கி தன் தோழியின் காதில் விழும்படி ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய நாமத்தை உச்சரித்தாள். ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய நாமத்தை உச்சரித்த வண்ணம் தன் உடலையும் உகுத்துவிட்டாள். சுவாமி துரியானந்தர் மேல்நாட்டு மக்களுக்கு ஆத்மஞானத்தை அவர்களுடைய உள்ளத்தில் இங்ஙனம் ஆழப்பதியச் செய்தார். சுவாமி துரியானந்தர் இத்தகைய ஆத்மீகப் பணியை மேல்நாட்டில் செய்து முடித்த பின் மேல்நாட்டுச் சிஷ்யர்களிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு இந்தியாவுக்குத் திரும்பினர். சுவாமி விவேகானந்தரைப் பார்க்க வேண்டும் என்ற பெரும் விருப்பம் அவருடைய உள்ளத்தில் எழுந்தது. எனவே சுவாமி விவேகானந்தரை நீண்ட நாட்கள் பிரிவுக்குப்பின் இப்பொழுது சந்திக்கப் போகிறோம் என்று எண்ணியதும் பெருமகிழ்வு அடைந்தார். அந்த மகிழ்ச்சியுடன் கப்பலில் பிரயாணம் செய்து இந்தியாவை நோக்கி வந்தார். (தொடரும்)

---

# மறு பிறப்பு

(சுவாமி விவேகானந்தர் 1895ஆம் ஆண்டு நியூயார்க்கிலுள்ள ஆன்மிக பத்திரிகை ஒன்றுக்கு எழுதிய கட்டுரை)

**बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।**
**तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परंतप ॥**

**— श्री मद्भगवद्गीता**

**பஹூனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன**
**தான்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்தபரந்தப**

*ஸ்ரீமத் பகவத்கீதை 4-5*

"அர்ஜுனா, உனக்கும் எனக்கும் பிறவிகள் பல கழிந்து போயின. பரந்தபா, அவற்றை எல்லாம் நான் அறிகிறேன்; நீ அறியமாட்டாய்."

பல புதிர்கள் மனிதனுடைய அறிவைக் குழப்பிக்கொண்டிருக்கின்றன. எல்லாக் காலங்களிலும், எல்லா நாடுகளிலும் இக்குழப்பம் இருந்து வருகிறது. அப்புதிர்களுள் மனிதனைப் பற்றியதுதான் மிகச் சிக்கலான புதிராக இருக்கிறது. பல்லாயிரக் கணக்கான பிரச்னைகளுக்குத் தீர்வுகாண்பதற்குச் சரித்திர காலம் தொடங்கி மனிதன் தன்னுடைய சக்திகளை எல்லாம் பயன்படுத்திப் போராடி வந்திருக்கின்றான். மனிதனுடைய இயல்பு ஒன்றும் விளங்காத புதிராக அவனுக்கு இருந்து வருகிறது. அது தீர்க்க முடியாத பிரச்னையாகவும், பிரச்னைகளுக்கெல்லாம் பெரிய பிரச்னையாகவும் இருந்து வருகிறது. மனிதனுடைய அறிவுக்கும் உணர்வுக்கும் செயலுக்கும் களஞ்சியமாக இருப்பது மனிதனுடைய இயல்பு ஆகும். அதுவே அனைத்துக்கும் தொடக்கமாக இருக்கிறது. அத்தகைய இயல்பு மனிதனுடைய கவனத்தை ஈர்த்து வந்துகொண்டிருக்கிறது. இனியும் அவ்வியல்பு மனிதனுடைய கவனத்தை ஈர்க்கும்.

உண்மையை அறியவேண்டும் என்ற அறிவுப்பசி மனிதனுடைய பிரக்ஞையோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது. அனைத்தையும் பெறவேண்டும் என்ற ஆவல் மனிதனுக்கு இருக்கிறது. புறவுலகத்தை அளந்தெடுக்கும் உள் ஒளியைப் பெறவேண்டும் என்ற ஆவலும் மனிதனுக்கு இருக்கிறது. மாறி அமைந்து கொண்டிருக்கும் இப்பிரபஞ்சத்தில் நிலையான ஒரு புள்ளியைக் காணவேண்டும் என்ற அவசியம் மனிதனுக்கு இருக்கிறது. மனிதன் சிலசமயங்களில் இவற்றை எல்லாம் மறந்து சிறுமையில் அகப்பட்டுக் கொள்கின்றான். அவனுடைய அறிவுக்கு மேலாகத் தெய்வீக சக்தி ஒன்று அவனை உந்திக்கொண்டிருக்கிறது. ஆனால் உள்ளிருக்கும் அந்தத் தெய்வீகசக்தியைப் பற்றிய உண்மையை உணர்வதற்கு அவன் பலமுறை தவறிவிடுகின்றான். மெய்ப்பொருளைப்பற்றிய ஆராய்ச்சி தொடங்கிய காலம் முதல் சிலரோ, தனிப்பட்ட ஒருவனோ அம்மெய்ப்பொருளை அறியாத காலம் இல்லை. மெய்ப்பொருள் என்னும் சுடர்விளக்கை எல்லாக் காலங்களிலும் உயர்த்திப் பிடிக்கின்ற மனிதர்கள் இருந்துதான் வருகின்றார்கள். ஒரு சார்புடைய மக்கள், நன்கு ஆராயாத மக்கள், சரியான கருத்தில்லாத மக்கள், அனுவசியமான சடங்குகளைக் கடைப்பிடிக்கின்ற மக்கள், கொள்கைகளிலும் பிரிவுகளிலும் வெறுப்படைந்த மக்கள், புரோகிதர்கள் கடைப்பிடிக்கும் மூடப்பழக்க வழக்கங்களை எதிர்க்கும் மக்கள், சமய ஆராய்ச்சி தேவையில்லை என்று பகர்கின்றார்கள். பழங்காலத்திலும் சமய ஆராய்ச்சியைக் கைவிட்டதோடு மட்டுமின்றி அது பயனற்றது, வீணானது என்றும் பகர்ந்திருக்கிறார்கள். அப்படிப் பகர்ந்தவர்களுள் பெரும்பாலோர் கல்வியறிவுடைய மக்களே ஆவார்கள். தத்துவ ஞானிகள் பூசாரிகளுடைய பிற்போக்கைக் கண்டித்தும் கேலி செய்தும் இருக்கிறார்கள். எனினும் அவர்கள் தங்களுடைய செயலைப் பயமுறுத்தும் முறையில் நடத்தி வருகிறார்கள். ஆனால் உண்மையைத் தரிசிப்பவர்கள் அம்பிகையைப் பக்திபூர்வமாக வணங்குபவர்களாக இருக்கவேண்டும். பயந்தோ வியாபார நோக்கத்தோடோ பக்தி செலுத்தாது பக்திக்காகவே பக்தி செலுத்துகிறவர்கள்தாம் உண்மையைத் தரிசிக்க முடியும்.

தனி மனிதன் அறிந்து உணர்வோடு செய்யும் சாதனையின் மூலம் ஞானவொளி பெறுகின்றான். ஒரு சமுதாயம் கசிந்துருகுமானால் அதற்கு மெதுவாக ஞானவொளி வருகிறது. அவ்வப்போது தோன்றியுள்ள தத்துவ ஞானிகள் பேருள்ளங்களின் உறுதியானமுயற்சிக்குச் சான்றுகள் ஆகின்றார்கள். அமைதியான முறை

யில் கசிந்துருகுவதன் மூலம் மக்கள் உண்மையை உணர்கிறார்கள் என்பதை வரலாறு விளக்குகின்றது.

மனிதன் தன்னைப்பற்றிக் கொண்டுள்ள கருத்துக்களுளெல்லாம் மேலான கருத்து ஒன்று உண்டு. ஆத்மா தனிப்பொருள், அது சரீரத்திலிருந்து வேறுபட்டது, அழியாதது என்ற கொள்கைகளையுடைய கருத்துத்தான் பரந்த கருத்தாகும். அத்தகைய கருத்தில் நம்பிக்கையுடையவர்களுள் பெரும்பாலோர் இப்பிறப்புக்கு முன்பும் பின்பும் ஆத்மா அழியாததாக இருக்கிறது என்பதை நம்புகின்றனர்.

இன்றைக்கும் சமய சார்புடைய மக்களுள் பெரும்பாலோர் அதில் நம்பிக்கை உடையவர்களாக இருக்கிறார்கள். சிறந்த சிந்தனையாளர்களில் பலர் இக்கொள்கைக்கு விரோதமாகவிருக்கும் நாடுகளில் வாழ்பவர்களாயினும் இக்கொள்கையை ஆதரிக்கின்றனர். இந்து மதத்துக்கும் புத்தமதத்துக்கும் இக்கொள்கைதான் அடிப்படை ஆகிறது. கல்வி அறிவுடைய பழங்கால எகிப்தியர்கள் இதில் நம்பிக்கை உடையவர்களாக இருந்தார்கள். பழங்காலப் பாரசீகர்களும் இதுதான் சரி என்ற முடிவுக்கு வந்தார்கள். கிரேக்க நாட்டு தத்துவ ஆராய்ச்சிக்காரர்களும் தங்களுடைய தத்துவத்துக்கு இதை ஆதாரமாகக் கொண்டார்கள். ஹீப்ருக்களுக்குள் இருந்த பாரசீகர்கள் இக்கொள்கையை ஏற்றுக்கொண்டார்கள். முகமதியர்களுக்குள் சூபிகள் என்போர் யாவரும் இவ்வுண்மையை ஏற்றுக்கொண்டார்கள்.

மக்களுக்கிடையே நம்பிக்கையை உண்டு பண்ணவும் அந்த நம்பிக்கையை வளர்க்கவும் சில செயல்கள் அவசியமாகின்றன. சரீரம் அழிந்த பிறகு அழியாத ஒன்று இருக்கிறது என்பதைப்பற்றி முடிவுக்கு வரப் பழங்கால மக்களுக்குப் பல்லாயிரம் ஆண்டுகள் தேவைப்பட்டன. சரீரத்துக்கு அப்பால் நிலையானதொன்று இருக்கிறது என்பதைப் புத்தி பூர்வமாக ஏற்றுக்கொள்வதற்கு மேலும் பல்லாயிரம் ஆண்டுகள் தேவைப்பட்டன. நிலையான பொருள் சரீரத்துடன் சிறிதுகாலமே தொடர்பு வைக்கிறது என்கின்ற முடிவிற்கு வந்த மக்களுக்கிடையே மேலும் ஒரு கேள்வி எழுந்தது. இவ்வுடலோடு அது எப்பொழுது எங்கிருந்து வந்து தொடர்பு வைத்தது என்பது அக்கேள்வியாகும்.

பழங்கால ஹீப்ருக்கள் ஆத்மாவைப் பற்றித் தங்களுக்கிடையே கேள்வியைக் கிளப்பித் தங்கள் மன அமைதியைக் கெடுத்துக்கொள்ளவில்லை. மரணத்தோடு எல்லாம் முடிந்து விடுகிறது என்பதுதான் அவர்களுடையகொள்கை. "பைபிளில் பழைய ஏற்பாட்டில் ஹீப்ருக்கள் சரீரத்திற்குப் புறம்பாக உயிர்ச்சக்தி உண்டு என்று நம்பினர். அதை நெபேஷ் என்றும், ரூக் என்றும், நெஷாமா என்றும் பெயர்கள் இட்டு அழைத்தார்கள். இச்சொற்களெல்லாம் மூச்சு என்ற கருத்தை விளக்குகின்றனவேயன்றி ஆத்மாவுக்குப் பொருத்தமான சொற்கள் அல்ல. பாலஸ்தீன யூதர்கள் எழுதியுள்ளவற்றிலும் அழியாத தனிப்பட்ட ஆத்மாவைப் பற்றிக் குறிப்பிடவில்லை. உயிர்ச்சக்தி இறைவனிடமிருந்து வந்து இவ்வுடலை இயக்கிவிட்டு இவ்வுடல் அழிந்தவுடன் அது தெய்வீக ரூக் என்பதில் கலந்துவிடுகிறது என்று அவர்கள் குறிப்பிடுகிறார்கள்." இங்ஙனம் கார்ல்ஹெக்கல் என்பவர் பகர்ந்திருக்கிறார்.

பழங்கால எகிப்தியரிடையேயும், சால்டியர்களிடையேயும் ஆத்மாவைப்பற்றிய விசித்திரமான நம்பிக்கைகள் இருந்தன. உடல் அழிந்த பின் வாழ்ந்திருக்கின்ற பகுதியைப்பற்றி அவர்கள் கொண்டுள்ள கருத்துக்களைப் பழங்கால இந்துக்கள், பாரசீகர்கள், கிரேக்கர்கள் போன்ற ஆரிய இனத்தார்களுடைய கருத்துக்களோடு தொடர்புபடுத்தி மனக்குழப்பம் அடையக் கூடாது. தொன்றுதொட்டு ஆத்மாவைப் பற்றிய கருத்தில் ஆரியர்களுக்கும், ஸம்ஸ்கிருதம் பேசாத மிலேச்சர்களுக்குமிடையே பெரிய வேற்றுமை இருந்தது. இறந்த சரீரத்தை அவர்கள் ஒவ்வொரு இனத்தாரும் என்ன செய்தார்களோ அது அவர்கள் கருத்துக்குப் புறவிளக்கமாக இருந்தது. மிலேச்சர்கள் இறந்த உடம்புகளை மண்ணில் புதைத்தும் தைலங்களைக் கொண்டும் அழியாமல் பாதுகாக்க முயன்றார்கள். ஆரியர்கள் இறந்த சரீரங்களை எரித்துவிட்டார்கள்.

இங்குதான் இரகசியம் ஒன்றை அறிவதற்கு வழி கிடைக்கிறது. எகிப்தியர், அஸ்ஸிரியர், பாபிலோனியர் ஆகிய ஒவ்வொரு இனத்தின

ரும் ஆத்மா உடலுக்கு அன்னியமானது, நித்தியப் பொருள், உடல் அழிந்த பிறகும் இருக்கிறது என்ற கருத்துக்களை ஆரியர்கள் அல்லது இந்துக்கள் மூலமாகப் பெற்றிருக்கக்கூடுமென்ற உண்மைக்கு இங்கு விளக்கம் கிடைக்கிறது.

எகிப்தியர்கள் ஆத்மா அழியாதது என்ற கருத்தை முதன் முதல் கருதியவர்கள் ஆவார்கள். "உடம்பு அழிந்தபின் ஆத்மா மீண்டும், மீண்டும் மற்றோர் உயிரின் உடலில் புகுகிறது. அப்பொழுது அவ்வுயிருக்கு வாழ்க்கை தொடங்குகிறது. இங்ஙனம் ஆத்மா பூமியில் வசிக்கும் உயிர்களின் உடம்புகளிலும், நீரில் வசிக்கும் உயிர்களின் உடம்புகளிலும், பறவைகளின் உடம்புகளிலும் புகுகிறது. இப்படிப் பல உயிர்களின் உடம்புகளில் புகுந்து மூவாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு மனித உடலை அடைகிறது. இது எகிப்தியர்களின் கொள்கையாகும்" என்று ஹெரோடாட்டஸ் என்பவர் பகர்ந்திருக்கின்றார். அவர் அப்படிப் பகர்ந்திருந்தாரெனினும் எகிப்திய நூல்களையும், கொள்கைகளையும் ஆராய்ந்த நவீன ஆராய்ச்சிக்காரர்கள் அவர் கூறிய கருத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. எகிப்து மதத்தில் மறுபிறவி கருத்துக்குச் சிறிதும் இடமில்லை என்கின்றனர். மாஸ்பரோ-ஏ-எர்மன் என்பவரும் மற்றும் திறமை வாய்ந்த எகிப்திய இலக்கிய ஆராய்ச்சிக்காரர்களும் எகிப்தியரிடையே மறுபிறப்புக் கொள்கைக்கு இடமில்லை என்றுதான் முடிவு செய்திருக்கின்றனர். ஆன்மாவுக்கு இரண்டு சரீரங்கள் என்றும், அதற்குத் தனித் தன்மை இல்லை என்றும், அது சரீரத்தின் தொடர்பிலிருந்து விலகி இருக்க முடியாது என்றும் பழைய எகிப்தியர்கள் கருதி வந்தார்கள். உடல் நிலைத்திருக்கும் வரையில்தான் ஆன்மாவும் நிலைத்திருக்கமுடியுமென்பது அவர்கள் கொள்கை. இந்தச் சரீரம் அழிந்து போய்விட்டால் சரீரத்தை விட்டு வெளியேறிய ஆவியும் அழிந்துபோகும். மரணத்திற்குப் பின் ஆத்மா உலக முழுவதும் சுதந்திரமாக அலைவதற்கு அனுமதியுண்டு. ஆனால் இரவில் இறந்த உடல் இருக்கும் இடத்திற்குத் திரும்பி வந்து விடவேண்டும். துக்கமும், பசியும், தாகமும் அதற்கு உண்டு. மீண்டும் வாழ்வை அனுபவிக்க அது பேராவல் கொண்டிருக்கிறது. ஆனால் அதனுடைய ஆவல் நிறைவேறுவது இல்லை. அதன் பழைய சரீரத்தில் ஏதேனும் ஒரு பகுதிக்குக் கேடு நேரிட்டாலும் ஆவி ரூபத்தில் உள்ள அதற்கும் அதே பகுதியில் கேடு ஏற்படும். இத்தகைய கருத்தை எகிப்தியர்கள் கொண்டிருந்ததனால் இறந்த சரீரத்தை அவர்கள் பாதுகாத்து வந்தார்கள். இறந்த சரீரத்தைப் புதைப்பதற்கு முதன் முதலாகப் பாலைவனங்களைத் தேர்ந்தெடுத்தார்கள். பாலைவனத்தில் வீசும் உலர்ந்த காற்று சரீரம் விரைவில் கெட்டுப் போகாது பாதுகாக்குமென்று அவர்கள் எண்ணினார்கள். அப்படி உடலைப் பாதுகாப்பதன் மூலம் உடலிலிருந்து வெளிச் சென்ற ஆவிக்கு நெடுங்கால வாழ்வு தந்தார்கள். நாளடைவில் உடலை மருந்து வகைகளைக்கொண்டு பாதுகாத்து வைக்கும் முறையைக் கண்டு பிடித்தார்கள். அந்த முறைப்படி முன்னோர்களின் இறந்த சரீரங்களைப் பாதுகாப்பதன் மூலம் தங்களுடைய முன்னோர்களுக்கு நீண்டகால வாழ்வு தரமுடியுமென்று நம்பினார்கள். காலம் சென்றவர்களுக்குஅங்ஙனம் வாழ்வு அளிக்கப்பட்டது. ஆவியுலகில் அவர்கள் எவ்வளவோ துயரப்பட்டாலும் அழிவின்மையைப் பெற்றுள்ளார்கள் என்று நம்பினார்கள். இனி உலகத்தை அனுபவிக்க முடியாது என்ற நிரந்தரமான வருத்தம் மாண்டுபோனவர்களைத் துன்புறுத்துகிறது. "என்னுடைய சகோதரனே, உண்டு, பருகி, குடித்து, சிற்றின்பம் அனுபவித்து இரு. எந்த இன்பத்தையும் நிறுத்திவிட வேண்டாம். ஆசையை நிறைவேற்ற அல்லும் பகலும் உழை. உள்ளத்தில் துயரத்துக்கு இடம் கொடுக்க வேண்டாம். உலகில் மனிதன் எத்தனை ஆண்டுகள் வாழ்ந்திருக்கப் போகிறான்? பூமியில் வாழ்கின்றவர்களுக்குக் கிடைக்கும் காற்றும் நீரும் எனக்குக் கிடைப்பதில்லை. இந்த மரண உலகத்துக்கு வந்ததிலிருந்து நான் யாரென்பதோ, நான் எங்கு இருக்கிறேன் என்பதோஎனக்குத்தெரியவில்லை. தாகத்துக்கு நீர் இல்லை, சுவாசிக்க நல்ல காற்று இல்லை. குடிக்க நன்னீர் கொடுங்கள். தென்றல் காற்று என்மீது வீச நீரின் ஓரத்தில் என்தலை வடக்கு நோக்கி இருக்கும்படி என்னை வையுங்கள்" என்று உடலை விட்டுப் பிரிந்தவன் புலம்புகிறான். (தொடரும்)

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி : (196) இராமகிருஷ்ணர், சைதன்யர் போன்றோரை அவதாரம் என்று குறிக்கும் பொழுது மாணிக்கவாசகர், ராமானுஜர் போன்றோரை ஏன் அவ்வாறு குறிப்பதில்லை ?**

சான்றோர்களைப் பாராட்டுதலில் ஒவ்வொரு மாகாணத்துக்கும் ஒவ்வொரு தனிப் போக்கு இருக்கிறது. தெய்வீகம் வாய்க்கப்பெற்றவர்களையெல்லாம் அவதார புருஷர்கள் என்று இயம்புவது அலாதியாக வங்காள மாகாணத்துக்குரிய போக்கு ஆகும். இன்றைக்கும் வங்காளத்தில் ஆங்காங்கு சுற்றிப் பார்த்தால் ஆத்மீக வாழ்வு வாழ்ந்து வருகிறவர்களுக்கெல்லாம் யார் யாரோ பழைய புருஷர்களுடைய அவதாரம் என்னும் பட்டம் கொடுத்து விடுவார்கள். கிட்டத்தட்ட அதை யொட்டிய கொள்கை ஒன்று தமிழ் நாட்டில் ஒரு சிலர்க்கிடையில் இருந்து வருகிறது. மஸ்தான் சாஹிப் என்னும் இஸ்லாமிய சான்றோர் ஒருவர் தமிழ் நாட்டில் வசித்து வந்தார். அவர் தாயுமானசுவாமிகளுக்குப் பிறகு தோன்றியவர். கிட்டத்தட்ட தாயுமான சுவாமிகளின் பாங்கிலேயே மஸ்தான் சாஹிப் பாடல்கள் பாடியிருக்கிறார். அதை முன்னிட்டு அவரைத் தாயுமான சுவாமிகளின் அவதாரம் எனக் கருதுபவர்கள் சிலர் இருக்கின்றனர். ஆனால் இக்கருத்து ஆதரவற்றது. வங்காளத்துப் பெருமக்களை அவதார மூர்த்திகளெனக் கருதுவது வங்காளிகளின் போக்கு என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டால் நமக்குப் பிரச்னைகள் ஒன்றுமில்லை. அண்மையில் தமிழ் நாட்டில் வாழ்ந்திருந்த ரமண மகரிஷி வங்காளத்தில் தோன்றியிருந்தால் அவரைச் சிவனார் அவதாரம் என்று அன்னவர்கள் போற்றியிருப்பார்கள். பக்தியில் மாணிக்கவாசகர், கிருஷ்ண சைதன்யருக்குப் பின் வாங்கியவரல்லர். ஆயினும் தமிழ் நாட்டு ஐதிகப்படி மாணிக்கவாசகரைத் தலை சிறந்த பக்தர் என்றே போற்றி வருகின்றோம். அதற்கு மேல் அவர் சைவ சமய ஆச்சாரியர்கள் நால்வருள் ஒருவராகப் போற்றப்படுகிறார். இந்தப் போற்றுதல் தான் பொருத்தமானது. வங்காளத்து ஐதிகப்படி ராமானுஜ ஆச்சாரியரை ஓர் அவதார புருஷராகப் போற்றுவது பொருந்தும். ஆனால் தமிழ் நாட்டு ஐதிகத்துக்கொப்ப நாம் அவரை உடையவர் எனப்போற்றுகிறோம். தகுதி வாய்ந்த ஜீவாத்மாக்களைத் திருமாலிடம் எடுத்துச் செல்லத் தகுதிவாய்ந்தவர் என்னும் கருத்துக்கொப்ப அவரை உடையவர் என்கிறோம். பின்பு அத்வைதம், விசிஷ்டாத்வைதம், துவைதம் ஆகிய மூன்று சம்ப்ரதாயங்களில் விசிஷ்டாத்வைதத்துக்கு முடிவான விளக்கம் கொடுத்தவராக ஸ்ரீ ராமானுஜரை நாம் போற்றுகிறோம். இப்போற்றுதலே பொருத்தமானது.

**கேள்வி : (197) பாபமன்னிப்பு என்னும் கொள்கை கிறிஸ்தவ மதத்தில் பழக்கத்தில் இருந்து வருகிறது. வினைப்பயனைத் தவிர்க்க முடியாது என்னும் கோட்பாட்டோடு இக்கொள்கையை இணைக்க முடியுமா ?**

வினைக்கேற்ற வினைப்பயன் என்பதும், அப்பயனை மாற்ற யாருக்குமே இயலாது என்பதும் இந்து மதக்கோட்பாடு. கிறிஸ்தவர்களுள் சமய அனுஷ்டானத்தில் மேலாம் ஸ்தானம் வகிப்பவர்களிடம் பொதுமக்கள் தனித்தனியாகச் சென்று தாங்கள் புரிந்த பாபத்தை எடுத்துப் பகர்ந்து மன்னிப்புக்கேட்பது (confession) அன்னவர்களின் சமய அனுஷ்டானங்களுள் ஒன்று ஆகும். மத அதிகாரி அப்பாபம் செய்தவனுக்கு மன்னிப்புக் கொடுக்கிறார். அதன் விளைவாக அம்மனிதன் தண்டனையினின்று தப்பித்துக்கொள்கிறான். கடவுளின் பிரதிநிதியாயிருக்கிற மத அதிகாரியின் மன்னிப்புக்கு அத்தகைய மகிமை இருக்கிறதென்பது அம்மதவாதிகளின் கொள்கை. இக்கொள்கையை நாம் அங்கீகரிப்பதில்லை. பிராரப்த கர்மத்தை மனிதன் அனுபவித்தே ஆகவேண்டும்என்பதுவேதாந்தக்கோட்பாடு. பிராரப்தகர்மம் புண்ணியமாகவும் இருக்கலாம், பாபமாகவும் இருக்கலாம். அவைகளின் விளைவு விலக்கமுடியாதது. ஆனால் ஞானோதயத்திற்குப் பிறகு கர்மத்தின் வேகத்தை ஞானி பொருள்படுத்துவதில்லை. ஆதலால் பழம் கர்மத்தின் விளைவு நோய் நொடியாகவோ, சுக ஜீவனமாகவோ வாய்க்கலாம். அந்த இன்ப

துன்பங்களுக்கு அப்பாற்பட்டவனாக ஞானி இருக்கிறான். இது வேதாந்தக் கோட்பாடு. கிறிஸ்தவ மதக்கொள்கையை யுக்திபூர்வமாக ஆராய்ந்து பார்த்தால் அது வெறும் குருட்டு நம்பிக்கை என்பது வெளியாகும். மானுடனொருவன் சாம்பல் குவியல் ஒன்றில் குதித்தான். அதன் உள்ளிருந்த தீ அவன் கால் வெந்து போகும்படி செய்தது. நான் அறியாமையினால் செய்த இந்தக் குற்றத்தை மன்னித்துக் கால் வெந்து போகாதிருக்கும்படி சீர்படுத்துங்கள் என்று மத அதிகாரியிடம் விண்ணப்பித்தால் அந்த விண்ணப்பத்தை ஏற்று அவன் துயரத்தை அவர் துடைத்து வைத்தால் அவரிடத்துப் பாப மன்னிப்பு வல்லமையிருக்கிறது என்று நம்பலாம். தீயில் கால் காந்திப் போவதைவிடக்கொடியபாபச் செயல்கள் இருக்கின்றன. சாமானியமான தீமையாகிய கால் வெந்துபட்டுப்போதலைச் சரிப்படுத்த இயலாத சமய ஆச்சாரியர் கொடிய பாபங்களுக்கு எப்படி மன்னிப்புத்தர வல்லவராவார் என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயமாகும். ஆகவே செய்த பாபத்தை ஒப்புக்கொள்ளுதலும் (confession) அப்பாபத்தை மன்னிப்பதும் (pardoning the sin) ஆகிய இரண்டு செயல்களும் ஆதரவு அற்றவைகளாம். பாபச்செயலின் விளைவாக வருகிற துன்பத்தை அமைதியாக ஏற்றுக்கொண்டு அதைச் சகித்துப் பழகுதல் ஓர் ஆத்மசாதனமாகிறது. வரம்புக்கு உட்பட்ட பாபத்துக்கு நரகத்தில் வரம்புகடந்த தண்டனை என்பது கிறிஸ்தவ மதக்கொள்கை. இக்கொள்கையையும் வேதாந்தம் ஆமோதிப்பதில்லை. உலக நீதிமன்றத்தில் குற்றத்துக்கேற்ற தண்டனை அமைந்திருப்பதில் ஒழுங்குப்பாடு இருக்கிறது. அதே விதத்தில் இயற்கையின் நியதியில் சிறிய பாபத்திற்குச் சிறிதுகாலத் துயரமும் பெரிய பாபத்திற்கு நெடுங்காலத் துயரமும் அமைந்திருப்பதைக் கண்கூடாகக் காண்கின்றோம். பிறகு மகா பாபங்களைச் செய்கிறவர்களும் பெரும் துன்பங்களுக்கு ஆளாகிப் பிறகு விமோசனம் அடைகின்றனர் என்பது வேதாந்தக் கோட்பாடு. Eternal hell முடிவில்லாத நரக வேதனை என்பதற்கு இயற்கையில் இடமில்லை.

**கேள்வி: (198) தர்மம், சனாதன தர்மம் என்றால் என்ன?**

இயற்கையின் அமைப்பு உயிர் வகைகளின் அமைப்பு. உயிர் வகைகளின் முன்னேற்றத்திற்கான செயல், உயிர் வகைகளின் நல்வினைக்கத்துக்கான செயல், ஆகிய இவையாவும் தர்மம் எனப்படுகின்றன. இயற்கை பஞ்சபூதங்களால் ஆனது. அவைகளுள் நிலத்தின் தர்மம் மணம் கமழுவது; நீரின் தர்மம் நனைப்பது; தீயின் தர்மம் தகிப்பது; காற்றின் தர்மம் உலர்த்துவது; ஆகாசத்தின் தர்மம் ஓசையைக் கிளப்புவது. இனி உயிர்வகைகளுள் ஸ்தாவரத்தின் தர்மம் இருந்த இடத்திலேயே வளருவது. ஜங்கமத்தின் தர்மம் வளர்ச்சியை நாடி இங்குமங்கும் போதல். மக்களுள் மாணாக்கனுடைய தர்மம் கல்வி கற்பது; ஆசிரியனுடைய தர்மம் கல்வி புகட்டுவது. மனிதனுடைய தர்மம் பரஸ்பரம் நேசிப்பதும், துணைபுரிவதுமாம். போர்வீரனுடைய தர்மம் கொடியபகைவர்களை அடக்குதல் அல்லது ஒடுக்குதலாம். மக்கள் எல்லார்க்கும் பொதுவாயுள்ள தர்மம் கடவுளை வழுத்துதல். சான்றோர்களின் தர்மம் மற்றவர்களை மேலோராக்குவது; துறவிகளின் தர்மம் பிரபஞ்ச வாழ்க்கையைக் கடந்து பரத்தினை அடைதலாம். இத்தனை விதமான தர்மங்களின் தொகை சனாதன தர்மம். தர்மம் எக்காலத்துக்கும், எல்லா இடங்களுக்கும், எல்லாச் சூழ்நிலைகளுக்கும் பொதுவானது. ஆதலால் அது சனாதன தர்மம் எனப்படுகிறது.

இனி, சந்தர்ப்பத்திற்கேற்ற பிரகாரம் தர்மானுஷ்டானம் மாறியமைகிறது. தசரத ராமன் பெற்றோர் ஆணைப்படி நடந்துகொண்டான். அப்படி அவன் நடந்துகொண்டது தர்மம் எனப்படுகிறது. அந்த ராமனுடைய தம்பி பரதன் தாயின் ஆணைப்படி நடந்துகொள்ள மறுத்துவிட்டான். அப்படி அவன் செய்ததும் தர்மம் எனப் பாராட்டப்படுகிறது. இங்ஙனம் நெருக்கடியான சூழ்நிலைகளுக்கேற்பத் தர்மா அனுஷ்டானமும் மாறியமைகிறது. அவைகளையெல்லாம் இங்கு விஸ்தாரமாக ஆராய வேண்டியதில்லை. தந்தையினுடைய ஆணைப்படி தாயைக் கொன்றான் பரசுராமன். அவன் செய்ததும் தர்மமே. தந்தையின் ஆணையைமீறி இறைவழிபாட்டில் ஆழ்ந்தான் பக்தன் பிரகலாதன். அவன் செய்ததும் தர்மமே. மனத்துக்கண் மாசு இலன் ஆதல் என்பது கோட்பாடு.

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-128

**736. मुक्तिदा முக்திதா**—மோட்சத்தைக் கொடுப்பவள் என்பது இதன் பொருள்.

உயிர்களனைத்தும் வெவ்வேறு விதங்களில் இயற்கையின்கண் கட்டுண்டு கிடக்கின்றன. அங்ஙனம் கட்டப்பட்டவைகள் தளையினின்று தப்பித்துக்கொள்ள முயலுகின்றன. எப்படி என்று பார்ப்போம். பிறந்த குழந்தை பசி தாகத்தில் கட்டுண்டு இருப்பதை உணருகிறது. அழுகையின் வாயிலாக அவ்வுணர்வை அது வெளிப்படுத்துகிறது. உடனே அதற்கு உணவு ஊட்டப்படுகிறது. பிறந்தவுடன் பசியும் தாகமும் உயிரைப் பந்தப்படுத்துகின்றன. அந்தப் பந்தத்தினின்று தன்னை விடுவித்துக்கொள்ள காலமெல்லாம் ஜீவன் முயன்று வருகிறது. அப்போதைக்கப்போது உண்ண உணவும் பருகப் பானமும் கொடுத்துப் பசி, தாகம் என்னும் பந்தத்தினின்று உயிர் அப்போதைக் கப்போது விடுவிக்கப்படுகிறது. ஆனால் அது நிரந்தரமான விடுதலையன்று. பிறந்த குழந்தைக்கு எடுத்த எடுப்பில் தன் அவயவங்களைச் சரியாகக் கையாள இயலுவதில்லை. கட்டுண்டு கிடப்பது போன்று குழந்தை உணருகிறது. கைகால்களை அசைத்துக் கட்டினின்று தன்னை விடுவித்துக்கொள்ள அது முயலுகிறது. முயற்சிக்கேற்ற விடுதலையையும் அது பெறுகிறது. இருந்த இடத்திலேயே அசையாது கிடப்பது ஒருவிதப் பந்தபாசம். அதை மீளச் சிசு முயலுகிறது. ஓரளவு வெற்றி பெறுகிறது. வெற்றிக் கேற்றவாறு அது விடுதலை பெற்றிருப்பதாக உணருகிறது. அச்செயலும் அன்னையின் அனுக்கிரஹத்தால் நிகழுகிறது. இங்ஙனம் ஆயுள்காலம் முழுவதிலும் ஒன்றன்பின் ஒன்றாக வந்து உபத்திரவப்படுத்துகின்ற விக்கினங்களினின்று தன்னை விடுவித்துக்கொள்ள ஒவ்வொரு ஜீவனும் முயலுகின்றன. அந்த முயற்சியே முக்திநாட்டம் என மொழியப்படுகிறது. முயற்சிக்கேற்றவாறு தாற்காலிகமான விடுதலையும் வாய்க்கிறது. இங்ஙனம் பல ஜன்மங்களில் ஒவ்வோர் உயிரும் தடைகளினின்று தங்களைவிடுவித்துக்கொள்ள பாடுபட்டுக்கொண்டேயிருக்கின்றன. அன்னையின் அருளால் இடைஞ்சல்களில் பெரும்பகுதியை மீளுதற்கான வல்லமை ஒவ்வோர் உயிர்க்கும் வாய்க்கிறது. மற்றுப் புதிய விக்கினங்கள் வடிவெடுத்துக்கொண்டே இருக்கின்றன. அன்னையின் அருளால் அவைகளும் ஓரளவு சமாளிக்கப்படுகின்றன. அப்படிச் சமாளிப்பதும் முக்தியின் அறிகுறியாம். பல பிறவிகளுக்குப் பிறகு பிரபஞ்ச வாழ்க்கையைப் பற்றிய பேருண்மை ஒன்றைப் பண்பாடடைந்த மனிதன் அறிந்துகொள்கிறான். அதாவது மாயப்பிரபஞ்சத்தில் கட்டுண்டு கிடக்கிற காலமெல்லாம் ஜீவாத்மனுக்கு விக்கினங்களினின்றும், பாசங்களினின்றும் நிரந்தர விமோசனமில்லை. எந்த ஜீவாத்மன் இயற்கையென்னும் பிறவிப் பெருங் கடலினின்று தன்னை மீட்டெடுக்கின்றானோ அப்பொழுதுதான் அவன் முக்தி என்னும் பெரிய பேற்றுக்குத் தகுதியானவனாகிறான். அவனுடைய தகுதிக்கேற்ப அன்னை பராசக்தி அவனுக்கு மோட்சத்தைக் கொடுத்து உதவுகின்றாள். தக்க தருணத்தில் அன்னையின் அருளால் பிரபஞ்சத்தளைகளைத் தவிர்த்துக் கொண்டு ஜீவாத்மாக்கள் விடுதலையடைகின்றன என்பது இந்த நாமத்தின் பொருள். அம்பிகையைச் சார்ந்திருந்து, சம்சாரக் கடலினின்று தங்களை விடுவித்துக் கொள்ள முயலுகின்றவர்களுக்கு அன்னையின் அருள் வந்து அமைகிறது.

**737. मुक्तिरूपिणी முக்திரூபிணீ**—முக்தியே வடிவெடுத்து இருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

இயற்கை முழுதும் அம்பிகையின் ஸ்வரூபம். அவள் தானே இயற்கையாக வடிவெடுத்து விளையாடுகிறாள். இயற்கையாக வடிவெடுத்து இருப்பவளும் அவளே. எது கால, தேச, நிமித்த மயமாகக் காட்சி கொடுக்கிறதோ அது இயற்கை. ஜீவாத்மாக்கள் இயற்கையில் கட்டுண்டு இருப்பதும் அவளுடைய விளையாட்டு. கட்டை அவிழ்த்துக்கொண்டு அவ்வுயிர்கள் விடுதலையடைய முயலுவதும் அவளுடைய விளையாட்டு. அந்த விளையாட்டைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். பிறந்த குழந்தை தாயை முதலில் அடையாளம் தெரிந்து கொள்ளுகிறது. தாயின் மடியிலேயே இனிது வசித்திருக்க விரும்புகிற குழந்தை தவழ்ந்து போகவோ, நடந்து போகவோ கற்றுக்

கொள்கிறது. அதன் பிறகு தான் பெற விரும்புகிற ஒரு பொருளை நாடி அது நகர்ந்து போகிறது. போகாதிருக்கும்படி நாய் தடை செய்தால் அத்தடையைத் தகர்த்துக் கொண்டு தான் விரும்புவதை நாடி அது போகிறது. தடையினின்று தன்னை விடுவித்துக்கொள்ளக் குழந்தை முயலுவது முக்தி நாட்டத்துக்கு முதல் அறிகுறியாகும். குழந்தை பெரியதாக வளர்ந்து வரவர அது பூணும் நாட்டங்களுக்கு ஆங்காங்கு அப்போதைக்கப்போது தடைகள் உண்டாகின்றன. அத்தடைகளை நீக்குதல் பொருட்டே மானுடர் எல்லாரும் முயலுகின்றனர். இச்சா சுதந்திரத்திற்கு இடுக்கண் வருகிறபொழுதெல்லாம் அந்த இடுக்கண்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ள முயலுவது முக்தி நாட்டமாம்.

வளர்ந்துவரும் கன்றுக்குட்டி ஒன்றைக் கட்டிப் போட்டால் அது கஷ்டப்படுகிறது. தன் போக்கில் போகக் கன்றுக்குட்டி முயலுகிறது. கட்டிய கயிறு அதற்குத் தடை. அத்தடையை மீள அது முயலுகிறது. அதன் முயற்சியின் விளைவாகக் கயிறு துண்டிக்கப்படுமானால் துள்ளிக்குதித்துக்கொண்டு கன்றுக்குட்டி ஓடுகிறது. கட்டினின்று தன்னை விடுவித்துக்கொள்ளுதலில் அது அடைகிற மகிழ்வு வெளிப்படையாக விளங்குகிறது. முக்தியில் நாட்டம் ஒரு கன்றினிடத்து என்ன பாங்கில் அமைந்திருக்கிறது என்பது வெளியாகிறது.

பறவை ஒன்றைப் பிடித்துக் கூண்டினில் அடைத்து வைத்தால் அது படாதபாடுபடுகிறது. பந்தத்தில் அகப்பட்டுக்கொள்வது அதன் நோக்கமன்று. சுதந்திர வாழ்வையே அது விரும்புகிறது. தான் படும் வேதனையை விளக்குவதன் வாயிலாக மக்களுக்கு அது பெரியபாடம் ஒன்று புகட்டுகிறது. முக்தியை நாட விரும்புகிறவர்கள் மற்றவர்களுக்கு எவ்விதத்திலும் பந்தத்தை விளைவிப்பது பொருந்தாது. பிறர்க்கு வழங்குகிற விளைப்பயனே பிறகு தனக்கு வந்து அமைகிறது. பிறரைப் பந்தப்படுத்துபவன் மேலும் மேலும் பந்தத்திற்கு ஆளாகிறான். பிறர்க்குச் சுதந்திரம் வழங்குவதற்கேற்ப தனக்கும் சுதந்திரம் வந்து வாய்க்கிறது. முக்தியை நாடுகிறவர்கள் இக்கோட்பாட்டைக் கருத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

வனத்தில் யதேச்சையாய் வாழ்ந்துவரும் சிங்கம், புலி முதலிய துஷ்ட விலங்குகளைப் பிடித்துக் கூண்டுகளில் அடைத்து வைத்தால் அவை பெரும் வேதனைக்கு ஆளாகின்றன. அனந்தங்கோடி ஜீவர்கள், அனந்தங்கோடி முறைகளில் இயற்கை விதித்துள்ள பந்தங்களிலிருந்து தங்களை விடுவித்துக்கொள்ள யாண்டும் முயன்று வருகின்றன. முக்தியடைதலே ஜீவகோடிகளின் குறிக்கோள் என்பது தேற்றம்.

பல பிறவிகளுக்குப் பிறகு வாழ்க்கையைப் பற்றிய அடிப்படைக் கோட்பாடு ஒன்றை மனிதன் கற்றுக்கொள்கிறான். எல்லாப் படித்தரங்களிலுமுள்ள உயிர்கள் யாவும் தத்தம் அறியாமையினாலேயே தத்தமக்குப் பந்த பாசத்தை விளைவித்துக்கொள்கின்றன. அக்ஞானம் அகலுதற்கேற்பப் பந்தமும் தானாக மறைந்துபட்டுப் போகிறது. அக்ஞானத்தால் மனிதன் தேகத்தைத் தன் மயமாக ஏற்றுக்கொண்டு அதன் வாயிலாகவரும் இடைஞ்சல்களில் அகப்பட்டுக்கொண்டு திணறுகிறான். ஜனன, மரணமாயிருக்கிற பிறவிச் சக்கரத்தில் மனிதன் அகப்பட்டுக்கொணடிருப்பதும் அக்ஞானத்தின் விளைவு. வாழ்விலே வெற்றி, தோல்வி; பெருமை, சிறுமை; புகழ்ச்சி, இகழ்ச்சி; வாழ்வு, மாய்வு ஆகியவைகளையெல்லாம் ஆத்மாவுக்கு உரியவைகள் என்று ஏற்றுக் கொள்ளுவது அக்ஞானத்தின் விளைவு. இதை முன்னிட்டே 'ஏற்பது இகழ்ச்சி' என்னும் கோட்பாடு வந்துள்ளது. தான் உடல் சொரூபம்அல்லன். தான் ஆத்ம சொரூபமே என்னும் ஞானோதயம் வாய்க்குங்கால் இயற்கைத் தளைகள் அனைத்தினின்றும் தன்னை விடுவித்துக்கொண்டு மனிதன் முக்தி அடைகின்றான். இதுவே பிரபஞ்ச வாழ்க்கையின் திட்டமாயிருப்பதால் அம்பிகை முக்தி ரூபிணீ எனப் பாராட்டப்பெறுகிறாள்.

**738. लास्यप्रिया லாஸ்யப்ரியா**—ஆடலில் பிரியம் உள்ளவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஆடுவதும் பாடுவதும் ஆனந்த மாகநின்னைத்
தேடுவதும் நின்னடியார் செய்கை பராபரமே.

தாயின் மடியில் வளர்ந்து வருகிற சிசு உடல் உறுதி பெற்றானபிறகு தாயின் மடிமீது நின்று கொண்டு துள்ளித்துள்ளிக் குதித்து விளையாடு

கிறது. ஆடல் மூலமாகத் தன்னிடத்துள்ள ஆனந்தத்தை வெளிப்படுத்துகிறது. ஆடல் எப்பொழுதுமே ஆனந்தத்துக்கு விளக்கமாகிறது. உலகெங்குமுள்ள மக்கள் எல்லாரும் இன்புற்றிருக்கிறபொழுது அவர்கள் ஒய்யாரமாக ஆடித் தங்கள் இன்பத்தை வெளிப்படுத்துகின்றனர். விலங்குகளும், பறவைகளும் தத்தம் போக்கில் ஆடி மகிழ்வுற்றிருக்கின்றன. உள்ளத்தில் ஊற்றெடுக்கும் இன்பத்தை உடலின் அசைவால் வெளிப்படுத்துவது நடனம் அல்லது நாட்டியமாகிறது. நாளடைவில் இது ஒரு கலையாகவே வடிவெடுத்து இருக்கிறது. உடலின் அசைவின் மூலமாக மனோ பாவங்களை வெளிப்படுத்துவது பரத நாட்டியம் என்னும் பெயர் பெற்றுள்ளது. பெண்பாலர்கள் புரிகிற நர்த்தனத்திற்கு லாஸ்யம் என்றும், ஆண்பாலர்கள் புரிகிற நர்த்தனத்திற்குத் தாண்டவம் என்றும் பெயர்கள் அமைந்துள்ளன. கலை மயமாக உடலின் அசைவு அமையவேண்டும் என்பதே இதன் கோட்பாடு. அண்டங்களை இயக்குவதின் மகிமை ஒன்றை அன்னை பராசக்தி விளக்குகின்றாள். எண்ணிறந்த கோளங்கள் வெவ்வேறு பாங்குகளில் இயங்குகின்றன. அவை யாவையும் தொகுத்தாராய்ந்து பார்த்தால் தேவியின் திரு நடனம் தெற்றென விளங்கும். அன்னை பராசக்தி தன்னுடைய ஆனந்த சொரூபத்தைத் தன்னுடைய ஸ்தூல மேனியாகிய பிரபஞ்சத்தின் மூலமாக விளக்கிக் கொண்டிருப்பதால் அவளுக்கு லாஸ்யப்ரியா என்னும் நாமம் வாய்த்துள்ளது.

**739 लयकरी லயகரீ** – ஒடுக்கத்தை உண்டு பண்ணுபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அண்டத்திலிருப்பது பிண்டத்திலுமிருக்கிறது என்பது கோட்பாடு. புறவுலகங்களனைத்தும் ஒன்று சேர்ந்து அண்டம் என்னும் பெயர் பெறுகிறது. மானுட அமைப்பு பிண்டம் என்னும் பெயர் பெறுகிறது. நடைமுறையில் இவைகளிரண்டுக்குமிடையில் பொருத்தம் இருக்கிறது. மனதை அடக்கி வைப்பதற்கேற்ப மனிதன் மேன்மையுறுகிறான். தன்னுடைய நிஜசொருபமாகிய ஆத்ம சைதன்யத்தில் மனிதனுடைய மனது ஆழ்ந்து மூழ்கியிருக்குமானால் அச்செயல் லயம் எனப்படுகிறது. மனதை ஆத்ம சொருபத்தில் அடக்கி வைப்பதற்கேற்ப மனிதன் வாழ்வில் மேன்மையுறுகிறான். ஆதலால் மேன்மையடைய விரும்புகிறவர்களனைவரும் தியானத்தின் வாயிலாக மனதை அடக்கி, ஒடுக்கி வைக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர்.

கானமும், நடனமும் முற்றிலும் ஒன்றுபட்டிருக்குமானால் அது லலித கலையில் லயமாகிறது. இராகம், தாளம், பாவம், நிருத்தியம் ஆகியவைகளுக்கிடையில் ஒழுங்குப்பாடு அமையுமிடத்து அது தலைசிறந்த லலிதகலை ஆகிறது. மனிதனை மகோன்னத நிலைக்கு எடுத்துச்செல்ல வல்லது அத்தகைய இலயம். அண்டங்களின் இயக்கத்திலும் அவைகள் உண்டு பண்ணுகிற ஓசையிலும் ஒவ்வொரு செயலுக்கும் உரிய கால அளவையும் முற்றிலும் ஒத்திருக்கின்றன. சந்திர, சூரிய, நட்சத்திரங்கள் இயக்கத்தில் ஒழுங்குப்பாட்டையும் கால அளவையையும் முறையாகக் காண்கிறோம். அதன் விளைவாக ஒலிக்கிற அனாகத தொனியைக் கேட்க ஆத்மசாதகன் வல்லவனாவானாகில் அது அவனுக்கு அரியதோர் அருள்விருந்து ஆகும். தேவியின் திருநடனத்தையோ தில்லைத்தாண்டவத்தையோ அப்பொழுது அவன் அனுபூதியிலறிந்து திளைத்திருக்கிறான். பண்பட்ட சித்தத்துக்கு எட்டுகிற பிரப்ஞ்ச இயக்கம் தேவியின் திருநடனம் என இயம்பப்படுகிறது. அதற்குமேல் உயிர் வகைகள் அடைந்துள்ள அறிவும் ஆனந்தமும் ஒன்றுகூடி தில்லைத் திருத்தாண்டவமாகிறது. இவை யிரண்டும் ஒன்றையொன்று சார்ந்திருக்கின்றன. அண்டகோடிகளின் இயக்கமே அம்பிகையின் நர்த்தனம். அருளோடு கூடிய அறிவும் ஆனந்தமும் ஒன்று சேர்ந்து சிதாகாச இயக்கமாகிறது. ஞானிகளும், பக்தர்களும், யோகிகளும், சித்தர்களும் அகத்திலும், புறத்திலும் இத்தகைய ஒழுங்குப்பாட்டை அனுபவ பூர்வமாகக் காண்கின்றனர். எங்கு ஒழுங்குப்பாடோ அதைத்தொடர்ந்து ஆனந்தம் பொழிவதை யாண்டும் நாம் காண்கின்றோம். லயகரீயாக அம்பிகை இருந்துகொண்டு அகத்திலும், புறத்திலும் ஒடுக்கத்தையும், ஒழுங்குப்பாட்டையும் அமைத்து வருகின்றாள். ஆதலால் ஆனந்தமாக அச்செயல் விளங்கி வருகிறது.

# அனுமன்-8

(சுவாமி ஆத்மானந்தர்)

கணையாழி கொடுத்தல்

அசோகவனத்தில் மரக்கிளையில் மறைந் திருந்த அனுமன் மந்திர பலத்தால் காவல் அரக்கியரை உறங்கச் செய்கிறான். அரக்கியர் அனைவரும் உறங்குவதைக் கண்ட சீதை துயர மிகுதியால் பலவாறு புலம்புகிறாள். சிறை கிடந்து வாடும் தன்னை இராமன் மீட்கவில் லையே என்ற வருத்தத்தால் ஆண் குலத்தையே நொந்து கொள்ளுகின்றாள். ஆனால் மறு கணமே, "பிறர் மனை புகுந்த பெண்ணைப் பேணுதல் அறமன்று" என்று அவன் கருதி யிருந்தால் அது இராமன் குற்றமன்று. உலகம் தூற்றும் பழிச் சொல்லுக்கு நான்தானே இலக்காகி இருக்கின்றேன். உயிரைத் துறந் தேனும் இப்பழியைத் துடைத்தல் என் கடமையாகும் என்று கருதுகிறாள்.

அரக்கியர் அனைவரும் உறங்குவதனால் தன் உயிரை மாய்த்துக்கொள்ள அருகி ருந்த ஒரு குருக்கத்தி மரப்புதருக்குச் செல்லு கின்றாள். கொடி ஒன்றினைத் துணித்துத் தன் கழுத்தில் சுருக்கிட்டுக்கொண்டு, ராம தியானத்திலிருந்து உயிர்விடத் துணிகின் றாள். மரக்கிளையில் மறைந்திருந்த அனும னுக்கு இதைக்கண்டு உடல் நடுங்குகிறது. செய்வதறியாது திகைக்கின்றான். சீதை யைத் தொட்டுத் தடுத்து நிறுத்தலாமா என்று எண்ணுகிறான். ஆனால் அவன் மனம் அதற்கு இடந்தரவில்லை; கையும் சீதையைத் தீண்டக் கூசுகிறது. இராம நாமத்தை உச்சரிப்பதைத் தவிர வேறு வழியில்லை என்று கருதுகிறான். சீதையின் காதில் விழும்படி 'ராம ராம' என்று தாரக மந்திரத்தை உச்சரிக்கிறான். அந்த நாமம் சீதையின் செவிகளில் விழுகின்றது. உயிர் விடப்போகும் தருணத்தில் தன் ஆருயிர்த் தலைவன் திருநாமத்தை யாரோ உச்சரிப்பதைக் கேட்ட சீதை கண்களைத் திறந்து பார்க்கின்றாள். கூப்பிய கரங்களுடன் 'அண்டர் நாயகன் அருள் தூதன் நான்' என்று உரைத்தவாறு அனுமன் சீதையின் எதிரே வந்து நிற்கின் றான். அனுமன் சீதையை நோக்கி, "இராமன் ஆணையால் இங்கு வந்துள்ளேன். பல்லாயிரக் கணக்கான வானர வீரர்கள் தங்களைத் தேடும் பணியில் ஈடுபட்டுள்ளனர். தங்கள் திரு உரு வைக் காணும் பாக்கியம் எனக்கு மட்டுமே கிட்டியிருக்கிறது. இது யான் செய்த தவப் பயனேயாகும். இங்கு நீங்கள் இருப்பது இராம பிரானுக்குத் தெரியாது. இந்த அரக்க வம்சத் தினர் இன்னும் உயிரோடு இருப்பதே அதற் குச் சான்றாகும்; வேறு சான்றேதும் வேண்டிய தில்லை. தாயே! என்னை ஐயுறல் வேண்டாம். இராமன் கொடுத்தனுப்பிய அடையாளப் பொருள் ஒன்று என்னிடம் உள்ளது. அவன் கூறியனுப்பிய அடையாள உரைகளும் சில உள்ளன. உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இவைகளைக் கண்டு கொள்ளலாம். என்னைப் பற்றி வேறுவிதமாக எண்ணவேண்டாம்" என்று தன்னைப்பற்றிக் கூறுகிறான்.

'ஈண்டு நீ இருந்ததை, இடரின் வைகுறும்
ஆண்தகை அறிந்திலன்; அதற்குக் காரணம்
வேண்டுமோ? அரக்கர்தம் வர்க்கம் வேரொடு
மாண்டில; ஈது அலால், மாறு வேறு உண்டோ?

ஐயுறல்; உளது அடையாளம்; ஆரியன்
மெய் உற உணர்த்திய உரையும் வேறு உள;
கை உறு நெல்லியங் கனியின் காண்டியால்;
நெய் உறு விளக்கு அனாய்! நினையல் வேறு'என்றான்.

அனுமன் உரையினைக் கேட்ட சீதைக்கு இரக்கமும் கோபமும் ஒருங்கே வருகின்றன. வந்தவன் இராமநாமத்தை உச்சரித்தமையால் அவன்பால் இரக்கமும், இராவணனே இத் தகைய மாறுவேடம் பூண்டு வந்திருப்பானோ என்ற ஐயப்பாட்டால் கோபமும் கொள்ளு கிறாள். பின்னர் அனுமனை நன்றாக உற்று நோக்குகிறாள். அனுமன் முகவிலாசம் சீதை யின் உள்ளத்தைக் கவர்கிறது. எதிரே நிற் கின்றவன் இரக்கமற்ற அரக்கனல்லன் என்ற முடிவுக்கு வருகின்றாள். சன்மார்க்க நெறி யிலே நிலைத்து நின்று பொறிகள் ஐந்தையும் வென்ற புனிதனே இவனாவான். அல்லது இவன் விண்ணுலகவாசியாகிய தேவனாய் இருக்கவேண்டும். இவன் நல்லறிவும், சொல் திறமும் உடையவன்; குற்றமற்ற நற்குணத்த

வனுவான் என்றெல்லாம் எண்ணுகிருள்.

சீதையின் உள்ளத்தில் நம்பிக்கையும் ஐயமும் மாறிமாறி இடம் பெறுகின்றன. சீதை பின்வருமாறு எண்ணத் தொடங்குகிருள். 'வந்தவன் யாராக இருந்தால்தானென்ன? அரக்கனேயாயினும் சரி, அல்லது ஓர் அமரனேயாயினும் சரி, அன்றி குரக்கினத் தொருவனேயாயினும் சரி, இவனுல் எனக்குத் தீமையுண்டாயினும் சரி, அல்லது நன்மை உண்டாயினும் சரி, இவன் எம்பிரான் இராமன் திருநாமத்தைச் சொல்லி என் உணர்வினை உருகச் செய்தனன். அழித்துவிட எண்ணிய என் உயிரையும் காப்பாற்றினன். இதைவிடப் பெரிய உதவி வேறு என்ன இருக்கிறது?'

அரக்கனே ஆக; வேறு ஓர் அமரனே ஆக; அன்றிக்
குரக்கு இனத்து ஒருவனேதான் ஆகுக; கொடுமை [ஆக;
இரக்கமே ஆக; வந்து, இங்கு, எம்பிரான் நாமம் [சொல்லி,
உருக்கினன் உணர்வை; தந்தான் உயிர்; இதின் [உதவி உண்டோ?

அனுமன் பொலிவினையும், சொல் திறனையும் கண்ட சீதை, "வீர நீ யாவன்?" என வினவுகின்ருள். கூப்பிய கரங்களுடன் அனுமன் சீதையை நோக்கி, "தாயே! இராமன் தங்களைப் பிரிந்த பின்னர் சூரிய குமாரனும், வானர ராஜனுமாகிய சுக்ரீவனை நண்பனுக்கிக்கொண்டான். அவன் தமையன் வாலி என்பவன் பெருவலிவு கொண்டவன். இராவணனை வாலில் கட்டிக்கொண்டு உலகெங்கும் தாவித் திரிந்தவன். அத்தகைய வாலியை ஒரே அம்பால் வீழ்த்தித் தம்பிக்கு ராஜ்யாபிஷேகம் செய்து வைத்தான். சுக்ரீவ மகாராஜனுக்கு எழுபது வெள்ளம் சேனைகளிருக்கின்றன. இராமன் ஏவலால் அவர்கள் அனைவரும் உம்மைத் தேடும் பணியில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்களுள் நானும் ஒருவனுவேன்.

"உம்மை இராவணன் வான்வழியாக எடுத்துச் சென்றபோது, நீங்கள் ஆடையில் கட்டிக் கீழே எறிந்த அணிகலன்கள் நாங்கள் இருந்த மலையின்மீது விழுந்தன. அவற்றை இராமபிரானுக்குக் காட்டினேம். இராவணன் தென் திசை நோக்கித்தான் போயிருப்பான் என யூகித்து என்னைத் தனியே அழைத்துச் சொல்ல வேண்டியதைச் சொல்லி, நீ தென் திசை சென்று சீதையைக் காண்பாயாக என்று பணித்தான். அவன் அருள் பழுதுபடாதாகையால் உமது திரு உரு காணும் பெரும் பேறு எனக்குக் கிட்டியது.

மேலும், இராமன் உம் நினைவிலேயே உயிர் வைத்திருக்கிருன். நீங்கள் கீழேகழற்றி எறிந்த அணிகலன்களை இராமனிடம் காட்டிய போது அவனிடத்து ஏற்பட்ட மெய்ப்பாடுகள் சொல்லுந்தரத்தன அல்ல. உம் பிரிவு எனும் துயரினுல் உயிர்விடும் நிலையில் இருந்த அவனுக்கு அந்த அணிகலன்கள்தாம் உயிர்போகாமல் காத்து நின்றன. கணவனைப் பிரிந்த உங்களுக்கு மாங்கல்யம் தவிர மற்றைய அணிகலன்கள் தேவையில்லை என்று அன்று நீங்கள் கழற்றி எறிந்த அணிகலன்கள்தாம் உண்மையில் இன்று பரியந்தம் உம் மாங்கல்யத்தைக் காத்து வருகின்றன. நீங்கள் சுமங்கலியாய் இருப்பதும் (உம் நாயகன் உயிரோடு இருப்பதும்) நீங்கள் அணிந்திருக்கும் மாங்கல்யத்தாலன்று. அன்று நீங்கள் கழற்றி யெறிந்த மற்றைய நல்லணிகளால்தாம் என்பதை அறிவீர்களாக" என்று கூறினுன்.

கொற்றவற்கு, ஆண்டு, காட்டிக்கொடுத்தபோது அடுத்த தன்மை,
பெற்றியின் உணர்தற்பாற்ருே? உயிர்நிலை பிறிதும் உண்டோ?
இற்றைநாள் அளவும், அன்னய்! அன்று நீ இழித்து நீத்த
மற்றைநல் அணிகள்காண், உன் மங்கலம் காத்த மன்னே!

அனுமனின் வார்த்தைகளைக் கேட்ட சீதைக்கு உள்ளத்தில் ஆனந்தம் பொங்குகிறது; உடல் பூரிக்கிறது. 'எனக்கு விடுதலை வந்து விட்டதோ!' என்று எண்ண எண்ணக் கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருகுகின்றது. சோகக் கண்ணீரையே ஓயாதுபொழிந்து கொண்டிருந்த சீதையின் கண்கள் இன்றுதான் ஆனந்தக் கண்ணீரைப் பொழியத் தொடங்குகின்றன. அனுமனை நோக்கி 'ஐயன் மேனி எப்படிக்கு அறிதி' என்று வினவுகிருள்.

இங்கு அனுமன் இராமன் திருமேனியழகினைப் பாதாதிகேசம் வர்ணிக்கின்ருன். அதைக்கேட்ட சீதைக்குத்தான் எவ்வளவு

ஆனந்தம்! அவள் உள்ளம் அனலிலிட்ட மெழுகு என உருகுகிறது. இராமனுக்கும் சீதைக்கும் மட்டுமே தெரிந்த அடையாள உரைகள் சிலவற்றையும் அனுமன் கூறுகிருன். முடிவில் இராமன் திருநாமம் பொறித்த கணையாழியையும் சீதையின் கையில் கொடுக்கின்றுன். கணையாழியைக் கண்ட சீதையின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. சீதைக்கு அந்த மோதிரமானது, பசியால் வாடுவோனுக்குக் கிடைத்த அமுதம் போன்றும், இருந்தோம்பி இல்வாழும் நல்லறமூர்த்திக்குக் கிடைத்த விருந்தினன் போன்றும், சாகுந்தறுவாயில் இருப்போனுக்குக் கிடைத்த சஞ்சீவி மூலிகை போன்றும் இருந்தது. இராமன் கணையாழி சீதாபிராட்டிக்குப் பெறலரும் பொருளாய் இருந்து பேருவகைக் கடலுள் ஆழ்த்திற்று. அவள் அடைந்த ஆனந்தப் பெருக்குக்கோர் எல்லையில்லை. இராமனையே திரும்பப் பெற்றதுபோன்று பரமானந்தத்தை அனுபவிக்கின்றுள். அந்த ஆனந்தத்தில் அனுமனை நோக்கிப் பிராணுேபகாரியே, என்றும் புருஷோத்தமனே என்றும் நிறைந்த உள்ளத்துடன் வாய்குளிர அழைக்கின்றுள். "உயிர் தந்தாய், உத்தம!" என்ற சொற்கள் சீதையினுடைய வாயினின்றும் குதலைச் சொற்கள் போன்று வெளிவருகின்றனவாம். எல்லையற்ற பேரானந்தத்தினுல் பேச்சுத் தடைப்பட்டுக் குழந்தையின் மழலைமொழிபோன்று வெளிவருகின்றனவாம்.

சீதை தன் மனத்தகத்து அனுமனை நினைக்குந்தோறும் அளவற்ற நன்றியுணர்வு அவளிடம் பெருகுகிறது. அவள் மனம் அனுமனுக்கு நன்றி செலுத்தத் துடிக்கின்றது. இப்பொழுது முன்போலன்றிக் கடல் மடைதிறந்தாற்போன்று வாக்குப் பிரவாகம்பெருக்கெடுத்தோடுகின்றது.

'மும்மை ஆம் உலகம் தந்த முதல்வற்கும்
முதல்வன் தூது ஆய்ச்
செம்மையால் உயிர் தந்தாய்க்குச்
செயல் என்னுல் எளியது உண்டோ?
அம்மை ஆய், அப்பன் ஆய
அத்தனே! அருளின் வாழ்வே!
இம்மையே மறுமைதானும்
நல்கினை, இசையோடு' என்றுள்.

அனுமனின் தாயையொத்த தூய அன்பை நினைந்து 'அம்மை' என்கிருள். தனக்கு உயிர் கொடுத்த ஆற்றலை எண்ணி 'அப்பன்' என்கிருள். அவன் நுண்ணறிவைப் பாராட்டி 'அத்தனே' என்கின்றுள். தனக்கு இகலோக வாழ்வையும், பரலோக வாழ்வையும் ஒருங்கே புகழோடு நல்கியது குறித்து 'அருளின் வாழ்வே' என்றழைக்கின்றுள். இப்படியெல்லாம் வாழ்த்தியும் சீதையின் மனம் திருப்தியுறவில்லை. மேலும் மேலும் அனுமனை அவள் வாழ்த்த விரும்புகிருள். பின்னரும் சீதை அனுமனை நோக்கி, "வலிமைகொண்ட தோள் படைத்த வீரனே! துணையேதுமின்றி நிர்க்கதியாய் இருந்த என்னுடைய துன்பத்தைப் போக்கிய வள்ளலே! நான் மாசுமறுவற்ற கற்புடைய மனமுடையவளேயானல், கற்பகாலம் ஒரு பகலே என்று சொல்லும்படியாக யாண்டும், ஈரேழு உலகங்களும் இறுதியுற்ற காலத்தும் இன்றுபோல் என்றென்றும் சிரஞ்சீவியாக இருப்பாயாக! என்று வாழ்த்துகிருள்.

'பாழிய பணைத்தோள் வீர! துணைஇலேன் பரிவு
தீர்த்த
வாழிய வள்ளலே! யான் மறு இலா மனத்தேன்
என்னின்,
ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டு எலாம்,
உலகம் ஏழும்
ஏழும் வீவுற்ற ஞான்றும், இன்று என இருத்தி' என்றுள்.

இந்த வாழ்த்துதலில் 'இன்றென இருத்தி' என்ற சொற்களில்தான் எவ்வளவு பொருள் புதைந்து கிடக்கின்றது என்பதைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம்.

குழந்தையொன்றைப் பார்த்து 'இன்றுபோல் இருத்தி' என்று வாழ்த்தினுல் அது உயர்ந்த வாழ்த்துதலாகாது. குழந்தை என்றென்றும் குழந்தையாகவே இருக்கக்கூடாது. அது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக மேலும் மேலும் வளரவேண்டும். அதனிடத்துள்ள ஆற்றலும், அன்பும், அறிவும் மேலும்மேலும் வளரவேண்டும். அந்நிலையில் இருக்கின்ற குழந்தையைப் பார்த்து 'இன்றுபோல் என்றும் இருத்தி' என்று வாழ்த்துவது பொருந்தாது. வயது முதிர்ந்த ஒருவனைப் பார்த்து 'இன்றுபோல் என்றும் இருத்தி' என்று வாழ்த்துவதும் உயர்ந்த வாழ்த்தாகாது. தனக்கும் பயன்படாது, உலகுக்கும் பயன்படாது வெறும் சுமையாய்

இருப்பதைவிட ஒருவன் அழிந்து போவதே மேல். உலகுக்குச் சுமையாய் இருக்கின்ற ஒருவனை எல்லாரும் பழிப்பர். உற்ருர் உறவினரும் தூற்றுவர். அதனுல் வயது முதிர்ந்தோனுக்கும் இவ்வாழ்த்து பொருந்தாது. ஆனுல் அனுமனுக்கு இது பொருத்தமானது. அனுமன் எல்லா நலன்களும் பெற்றவன். ஆற்றல், அன்பு, அறிவு ஆகிய அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்றவன். இவன் கல்லாத கலை என்பதே இல்லை. நவ வியாகரண பண்டிதனுகை இருப்பவன். வரபலம் மிகப்பெற்றவன். சீதாபிராட்டியின் வாழ்த்துதலினுல் அனுமன் சிரஞ்சீவிகளுள் ஒருவனுகிவிடுகின்ருன்.

அனுமன் இப்பெருங்கடலை எப்படித் தாண்டி வந்தான் என்று அறிந்துகொள்ள சீதை விரும்புகின்ருள் அனுமனை நோக்கி, இவ்வளவு சிறிய வடிவமுள்ள நீ எப்படிச் சமுத்திரத்தைக் கடந்து வந்தாய்? என்று கேட்கின்ருள். அதற்கு அனுமன் வாய் திறந்து பதில் ஏதும் சொல்ல வில்லையாம். தான் கடல் கடக்க எடுத்த விசுவரூபத்தைச் சீதையின் கண் முன் காட்டி நின்ருனும். அனுமனின் விசுவரூபதரிசனத்தைக் கண்ணுற்ற சீதை வியப்பும் அச்சமும் அடைகின்ருள். பழையபடி யாவரும் காணத்தக்க சிறு வடிவம் கொள்ளுமாறு வேண்டுகிருள். அனுமனும் அப்படியே செய்கிருன். விசுவரூபத்தைக் கண்ட சீதை அகமும் முகமும் மலர ''இத்துணைப் பேராற்றல் மிக்க நீயே, என் நாயகனுக்குத் துணையாய் இருப்பதால் அவன் வெற்றி பெறுவதும், அரக்க சேனை அழிவதும் உறுதி" என்கிருள்.

மின்நேர் எயிற்று வல் அரக்கர் வீக்கம் நோக்கி,
வீரற்குப்
பின்னே பிறந்தான் அல்லது ஓர் துணை இலாத
பிழை நோக்கி,
உன்னு நின்றே உடைகின்றேன், ஒழிந்தேன் ஐயம்;
உயிர் உயிர்த்தேன்;
என்னே? நிருதர் என் ஆவர், நீயே எம் கோன்
துணை என்ருல்?

சீதையின் பாராட்டுதலைக் கேட்ட அனுமன், ''தாயே! இராமனுக்குத் துணை செய்யும் படைத்தலைவர் கணக்கற்ருேர் இருக்கின்றனர். கடல் மணலைப் போன்ற சேனை வெள்ளத்தில் நான் ஒருவனுவேன்" என்கிருன். "யான் அவர்தம் பணிக்கு ஒருவன் எனப் போந்தேன்; ஏவல் கூவல் பணி செய்வேன்" என்று கூறுகின்ற அனுமனின் அடக்கத்தினை என்னென்பது! "பணியுமாம் என்றும் பெருமை" என்கிற வள்ளுவரின் வாக்கிற்கு அனுமன் மிகப் பெரிய எடுத்துக்காட்டாவான்.

சீதையைக் கண்டு இராமதூதனென்று சொல்லிக், கணையாழியைக் கொடுத்து, விசுவரூபம் காட்டி,ஆறுதல் வார்த்தைகள் கூறித் தேற்றிய அனுமன் சீதையிடம் விடைபெற்றுக்கொள்ள விரும்புகிருன். ''நான் திரும்பிப்போய் இராமனிடம்சொல்லுதற்குரிய செய்தி ஏதேனும் உண்டா?" என்று கேட்கின்ருன். அதற்கு மறுமொழியாகச் சீதை, "நான் இன்னும் ஒரு மாதகாலம் தான் உயிரோடிருப்பேன். இதை என் நாயகன் இராமன் மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன். ஒருமாத காலத்திற்குள் இராமன் என்னை மீட்காவிடில் உயிர் துறப்பது நிச்சயம். அதற்குப் பின், இராமன் இங்கு வராமல் கங்கையாற்றங் கரையிலே எனக்குரிய அந்திமக்கிரியைகளைச் செய்துவிட்டு ஊர்திரும்பலாம் என்று ராமனிடம் சொல்'' என்ருள்.

"திங்கள் ஒன்றின் என் செய் தவம் தீர்ந்ததால்;
இங்கு வந்திலனே எனின், யானர் நீர்க்
கங்கை யாற்றங் கரை, அடியேற்கும், தன்
செங்கையால் கடன் செய்க என்று செப்புவாய்."

[இராமன் தனக்கு அடையாள வார்த்தையும் கணையாழியும் கொடுத்தனுப்பியது போன்று, சீதையும் அடையாள வார்த்தையும், சூடாமணியும் கொடுத்தனுப்புகின்ருள். சீதையினிடத்திருந்து சூடாமணியைத் தொழுது பெற்ற அனுமன் விடைபெறுதற்குச் சீதையின் முகத்தைப்பார்க்கிருன். அழுதுகொண்டே மும்முறை வலம் வருகிருன். பின்னர் கீழே விழுந்து வணங்குகிருன். சீதையும் கைகூப்பித் தொழுகின்ருள். அனுமனுல் பேச முடியவில்லை. அங்கிருந்து நீர் ஒழுகும் கண்களுடன் புறப்பட்டுச் செல்லுகிருன். சீதையும் மௌனமாக அனுமனுக்காகப் பிரார்த்திக்கின்ருள்.]

தொழுது வாங்கினன்; சுற்றிய தூசினன், முற்றப்
பழுது உறுவகை பந்தனை செய்தனன்; வந்தித்து,
அழுது, மும்மை வலம் கொடு இறைஞ்சினன்;
அன்போடு
எழுது பாவையும், ஏத்தினள்; ஏகினன் இப்பால்.

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

( வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M.A. )

சங்க காலத்தில் மக்கள் வணங்கிய தெய்வங்கள்; அத்தெய்வங்களிடத்தில் அவர்கள் கொண்டிருந்த பயபக்தி; அத்தெய்வங்களை மனத்தால் நினைத்துப் போற்றிய விதம்; வெறியாட்டு, மலர் தூவுதல் ஆகிய கிரியை முறைகளால் வணங்கிய விதம்; அத்தெய்வங்கள் அம்மக்களுக்கு அருள் சுரந்த விதம் ஆகியவை பற்றிய செய்திகளை இதற்கு முன் பார்த்தோம்.

இனி, சங்க காலத்தில் இருந்து வந்த நம்பிக்கைகள், சமயச் சடங்குகள், அக்கால மக்கள் பல வகையாலும் வணங்கி வந்த வழிபாட்டு முறைகள் ஆகியவற்றைப் பற்றிப் பார்ப்போம்.

**சங்க காலத்தில் இருந்து வந்த நம்பிக்கைகள்**

சங்ககால மக்களிடத்தில் பலவித நம்பிக்கைகள் இருந்து வந்தன. பெரும்பாலும் எல்லா நம்பிக்கைகளும் தெய்வத்தை அடிப்படையாகக் கொண்டே விளங்கி வந்தன. வேறு எந்த மனிதரிடத்திலும் நம்பிக்கை வைப்பதைவிட இறைவனிடத்து நம்பிக்கை வைப்பது வாழ்வுக்கு உறுதியாகும். வேறு எந்தப் பொருள் மீதும் நம்பிக்கை வைப்பது ஏமாற்றத்தை அளிக்கும். தெய்வத்திடத்து நம்பிக்கை வைப்பது எண்ணிய எண்ணம் ஈடேறுவதற்கு மிகச் சிறந்த வழியாகும். மனம் நன் முறையில் திருந்தி அமைவதற்கும் இறை நம்பிக்கை உறுதுணை ஆகிறது.

இறைவன் இருக்கிறான் என்ற முடிவுக்கு வருவதும், வழிபாடு செய்வதும் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டதே ஆகும். நம்பிக்கையைத் தவிர இதற்கு வேறு வழி இல்லை. இத்தெய்வ நம்பிக்கையின் பயனாக மனத்தில் உறுதி ஏற்படுகிறது. உறுதி காரணமாக அஞ்சாமை உண்டாகிறது. இந்த மன உறுதியும், அஞ்சாமையும் சங்ககால மக்களை அமைதியாகவும், மகிழ்வுடனும் வாழவைத்தன.

அழகில் ஈடுபடாதவர்கள் யார்? ஒருவரும் இல்லை. அழகில் எல்லாருக்கும் ஓர் ஈடுபாடு உண்டாகும். அந்த அழகு ஈடுபாட்டை வலிவுடையதாக்குவதற்குச் சங்ககால மக்கள் இறைவனை முருகன் என அழைத்தனர். முருகு-அழகு; முருகன்-அழகன். முருகனை அழகன் ஆக்கி அவனிடத்தில் தங்கள் முழுமனத்தையும் ஈடுபடுத்தினர்.

முருகன் என்பவன் இளமையும் அழகும் உடையவன். இளமையில் ஒருவித அழகும் கவர்ச்சியும் உண்டு. மக்கள் இளமையோடும் அழகோடும் இருக்கும்போது கடவுளை நினைப்பதில்லை. முதுமை வந்த பிறகே பலரும் இறைவனை நினைக்கின்றார்கள். அவ்வாறு முதுமை வந்த பிறகுதான் இறைவனை நினைக்கவேண்டும் என எண்ணுவது தவறு. இளமையிலேயே இறைவனை வணங்குதல் வேண்டும் என்ற எண்ணத்தில் முருகனை அழகும் இளமையும் உடைய கடவுளாக நம்பி வழிபாடு செய்தனர்.

மனத்தில் நல்ல எண்ணங்களும் இருக்கின்றன; தீய எண்ணங்களும் இருக்கின்றன. நல்ல எண்ணங்கள் மனத்தில் பாதுகாக்கப்படவேண்டும். திருமால் பாதுகாக்கும் தொழில் படைத்தவர்; நல்ல எண்ணங்களை மக்கள் மனத்தில் திருமால் பாதுகாப்பவராக அமைகிறார் என்ற நம்பிக்கையில் திருமாலைச் சங்க கால மக்கள் வழிபட்டனர்.

தீயவற்றை அழிப்பவன் சிவன்; தீய எண்ணங்களை மக்கள் மனத்திலிருந்து அழிப்பவன் சிவன் எனக் கருதிச் சிவனை வழிபட்டனர் சங்க கால மக்கள்.

முறையான உடல் வலிமை ஒழுங்கிற்கு அடிப்படையாக அமைகிறது. நல்ல உடல் வலிமை உடையவர்கள் நல்லொழுக்கத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் ஆவார்கள். கொற்றவையை வழிபட்டால் நல்லொழுக்கம், உடல் உறுதி வாய்க்கும் என நம்பிக் கொற்றவையை வழிபட்டனர் சங்ககால மக்கள்.

புண்ணியம் பாவம் ஆகியவற்றில் சங்ககால மக்களுக்கு நம்பிக்கை இருந்தது. புண்ணியத்தைச் சேர்க்க வேண்டும்; பாவத்தைப் போக்க வேண்டும் என்பது அவர்களுடைய வாழ்க்கையின் இலட்சியமாக இருந்தது. பாவத்தை ஒழிப்பதற்காகப் புண்ணிய தீர்த்தங்களிலே நீராடி வந்தார்கள். ஆறு, குளம் முதலியவற்றைப் புண்ணிய தீர்த்தங்களாகக் கருது

கிறோம். கடல், கிணறு முதலியவற்றையும் புண்ணிய தீர்த்தக் கட்டங்களாகக் கருதுகிறோம்.

தீர்த்தக் கட்டங்களை நாம் தாயாகக் கருதி, பெண்ணாகக் கருதி வழிபடுகிறோம். தந்தையைக் காட்டிலும் தாய்க்கு நம் தீமைகளை ஏற்றுக்கொள்ளுகிற இளகிய மனம் உண்டு. ஆகவே தீர்த்தக் கட்டங்களைப் பெண்ணாகப் பாவித்து, அவற்றில் நீராடினால் பாவம் ஒழியும் என்னும் நம்பிக்கை சங்ககால மக்களிடத்தே இருந்தது.

பௌர்ணமி நாளைப் புனித நாளாகச் சங்க கால மக்கள் கருதினார்கள். மனத்திற்கு உவகைதரும் நாள் பௌர்ணமி நாள். "சென்ற பௌர்ணமி தினத்தில் எங்கள் தந்தையார் உயிருடன் இருந்தார்; எங்கள் நாடு பகைவர் வசம் அகப்படாமல், எங்கள் வசமே இருந்தது. இந்தப் பௌர்ணமி நாளில் எங்கள் தந்தையார் இறந்துபோனார்; எங்கள் நாட்டையும் பகைவர் வசப்படுத்திக்கொண்டனர்" என்று பௌர்ணமி தினத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாரி மகளிர் பாடியுள்ளனர். இச் செய்தி புறநானூற்றில் கூறப்படுகிறது.

"பௌர்ணமி ஏழாம் நாளில் ஒருவிழா நிகழும். அந்த விழாவில் தங்கள் பாவங்களைப் போக்குவதற்காக நீராடுவார்கள்" என்ற செய்தி மதுரைக் காஞ்சி என்ற சங்ககால நூலில் சொல்லப்படுகிறது.

பேய் உண்டு என்று சங்ககால மக்கள் நம்பினர். பேய்க்கு அலகை என்ற பெயர் உண்டு. அணங்கு என்ற சொல் ஒன்று உண்டு. அச்சொல்லுக்குத் "தீண்டி வருத்தும் தெய்வம்" என்று பொருள் கூறுவார்கள். போரில் விழுப்புண்பட்ட வீரனின் புண்ணை, இரவில் பேய்கள் வந்து தீண்டித் துன்பப் படுத்தும் எனச் சங்ககால மக்கள் நம்பினர்கள். அப்படி வந்து துன்புறுத்தாதபடி வேப்பந்தழை, இரவந்தழை ஆகியவற்றை வீட்டு இறப்பிலே செருகிவைப்பார்கள். தூபப்புகை வீடு முழுவதும் போடுவார்கள்.

மாலை வேளையில் அந்தி மயங்கும் வேளையில் கைக்குழந்தைகளை வெளியே கொண்டுவரக் கூடாது என்று சொல்லுவார்கள். பழைய காலத்திலும் இந்த நம்பிக்கை இருந்துவந்தது. சூரியன் மறைந்து இருள் பரவும் நேரத்தில் கைக் குழந்தைகளை வீட்டுக்கு வெளியே கொண்டுவருவதில்லை. அப்படிக் கொண்டு வருவதாக இருந்தால் ''ஜயவி'' என்ற வெண் சிறு கடுகைப் பொடி செய்து குழந்தையின் தலையிலே சிறிது அப்பி வைப்பார்கள். இவ்வாறு செய்தால், பேய் தீண்டிவருத்தும் தெய்வம் முதலியன தீண்டமாட்டா என்ற நம்பிக்கை இருந்து வந்தது.

காக்கும் கடவுள் திருமால். திருமால் கையில் உள்ள கருவிகள் ஐந்து. சங்கு, சக்கரம், வில், வாள், கதை ஆகியவை அவ்வைந்து ஆகும். குழந்தைகளைத் திருமால் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தில், திருமாலின் படைக்கருவிகளான இவ்வைந்தையும் பொன்னால் செய்து, பொன் சங்கிலியில் கோத்துக் குழந்தைகளின் கழுத்தில் அணிவது உண்டு. இவ்வாறு அணிந்தால் திருமால் நம் குழந்தைகளைக் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கை இருந்து வந்தது.

இந்த முறை காலப்போக்கில் மாறியது. நாய், தாயத்து, திறவுகோல் எனப் பொன்னால் செய்து, குழந்தைகளின் அரைஞாணில் கோத்துத் தற்காலத்தில் அணிகின்றனர்.

இறந்துபோனவர்களைத் தெய்வமாகப் பூஜிக்கும் பழக்கம் சங்க காலத்திலேயே இருந்து வந்தது. இறந்துபோனவர்களைத் "தென்புலத்தார்'' எனக் கூறினர். இறந்துபோன உறவினர்கள் தெய்வமாக நின்று நம்மையும், நம் குடும்பத்தவர்களையும் காப்பாற்றுவார்கள்என்ற நம்பிக்கை அவர்களிடத்தில் இருந்து வந்தது. இறக்கின்ற வரையிலும் நேரடியாகத் தொடர்பு கொண்டார்கள். இறந்த பிறகு அவர்களைக் குறித்துச் செய்யும் நீத்தார் கடன் முதலிய கிரியைகளால் அவர்களை மனத்தாலே நினைத்து, எண்ணத்தின் மூலம் தொடர்புகொண்டனர்.

இவ்வழிபாடு காலப்போக்கில் மாறுபட்டது. திதி, திவசம், கன்னிபூஜை, சேலை வைத்துப் பூஜித்தல் என்று இவ்வழிபாடு இப்பொழுது நடைபெறுகிறது. ஆண்டுதோறும் குறிப்பிட்ட நாளில் வீடுகளில் இந்நிகழ்ச்சி கொண்டாடப் பெறும்.

இறந்த வீரனைத் தெய்வமாக நம்பி நடுகல் ஒன்று நடுவார்கள். அந்நடுகல்லில் அவனுடைய பெயர், பெருமைகள் முதலியன எழுதப்பட்

டிருக்கும். அவ்வீரனின் உருவமும் செதுக்கப் பட்டிருக்கும். அவ்வீரனை வணங்கினால் நம் குடும்பத்தில் நினைத்த காரியம் நிறைவேறும் என்ற நம்பிக்கை அவர்களிடத்தில் இருந்து வந்தது.

இறந்த வீரனின் நினைவாக நடப்பட்ட இந்த நடுகல் காலப்போக்கில் மாறியது. சமாதியாக வும், சாமி பீடங்களாகவும் மாறியது. கிராமங் களில் சாமி பீடங்களை இன்றும் காணலாம்.

"வடக்கிருத்தல்" என்ற ஒரு வழக்கம் சங்க காலத்தில் இருந்து வந்தது. ஏதாவது தவறு செய்துவிட்டால், மானம் இழக்கும் நிலை ஏற்பட்டுவிட்டால் வடக்கிருந்து உயிர் நீத்து விடுவார்கள். வடக்கிருத்தல் என்றால் என்ன? ஆற்றுக்கு நடுவில் உள்ள மணல் திட்டில், வடக் குத் திசை நோக்கி அமர்ந்து, உண்ணா நோன்பு மேற்கொண்டு, தியானம் செய்து உயிர் விடு வது வடக்கிருத்தல் எனப்படும். வடக்கிருத்தலை "உள்நோக்கி இருத்தல்" எனவும் கூறுவார்கள். மனத்தை வெளிச் சிந்தனையில் செல்லவிடாமல் உள்நோக்கித் திருப்பி இறைவனைத் தியானம் செய்தல் எனவும் கூறுவார்கள்.

வடக்கிருத்தல் என்பது குறிப்பிட்ட ஒரு சாரார் அதாவது மானத்தை இழந்தபின் உயிர் வாழ நினைக்காதவர்கள் மேற்கொள்ளுவது.

இவ்வாறு வடக்கிருந்து உயிரை விடுவது மானத்தை இழந்ததற்கும், தவறு செய்ததற்கும் பிராயச் சித்தமாகும் என நம்பினார்கள்.

உயிர் என்ற ஆன்மா, மறுபிறவி ஆகியவற் றில் சங்ககால மக்கள் நம்பிக்கை கொண்டிருந் தார்கள் என்பது சங்ககாலப் பாடல்களால் தெரியவருகிறது. உயிர் என்ற ஒன்று உண்டு; அதனைக் கண்ணால் காணமுடியாது; மிகவும் நுண்ணியது; போற்றவேண்டிய ஒன்று என அவர்கள் நம்பினார்கள். ஊழ்வினைப்படியே உயிரானது இயங்கும் தன்மை உடையது; உயிர்கள் தாம் செய்த நல்வினை, தீவினை ஆகிய வற்றிற்கு ஏற்றவாறு இன்பம் துன்பம் இவற்றை அனுபவிக்கும். நல்வினை தீவினைக்கு ஏற்றவாறே செல்வமோ வறுமையோ இவர் களுக்கு வந்து சேரும்; சொர்க்கமோ நரகமோ உயிர் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்ற வாறு அமையும் என்பது சங்ககால மக்களின் நம்பிக்கையாக இருந்தது.

நல்வினை செய்து அதன் காரணமாக உயிா நற்கதி அடைதல் வேண்டும் என்ற எண்ண மும், பிறந்து உலகத்தில் துன்பம் அனுபவித் தது போதும் என்ற நினைப்பும் அவர்களுக்கு இருந்தன.

"தோன்டவேன் பிறந்து வாளா தொல்வினைக் குழியில் வீழ்ந்து
பிண்டமே சுமந்து நைந்து பேர்வதோர் வழியும் காணேன்"

"பெற்றலும் பிறந்தேன் இனிப் பிறவாத தன்மை வந்து எய்தினேன்"

என்பது ஆன்றோர் திருவாக்கு.

நிமித்தம் பார்க்கும் வழக்கம் சங்ககால மக்க ளிடத்தே இருந்தது. நிமித்தம் என்பது சகு னத்தைக் குறிக்கும். வீட்டில் இருந்து புறப் பட்டு வெளியே செல்லுவதற்கும், வீட்டிற்குத் திரும்பி வருவதற்கும் நிமித்தம் பார்க்கும் வழக்கம் இருந்தது. நிமித்தம் பார்த்துச் சொல்வதற்கென்றே ஓர் ஆள் உண்டு. அவ னுக்கு நிமித்திகன் என்பது பெயர். பறவை களால் நிமித்தம் பார்த்தனர். ஓணான் முதலிய வற்றாலும் நிமித்தம் பார்த்தனர்.

விரிச்சி கேட்டல் என்ற ஒரு நிமித்தமும் இருந்தது. அதற்கு நற்சொல் கேட்டல் என்பது பொருள். யாராவது இருவர் ஒரு காரியத் தைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கும் போது, "இக்காரியம் நன்முறையில் நடக்கும்" என்று வீதி வழியே போகின்ற ஒருவரின் வார்த்தை காதில் கேட்டால், அதை விரிச்சி கேட்டல் அல்லது நற்சொல் கேட்டல் என்பார்கள். அசரீரி வாக்கு என்று நாம் சாதாரணமாகக் குறிப்பிடுகிறோம்.

நற்சொல் அல்லது விரிச்சி கேட்பதைத் தொழிலாகக் கொண்ட பெண்களும் சங்க காலத்தில் இருந்தார்கள். இவர்கள் வயது முதிர்ந்த பெண்டிர். முல்லைமலர், நெல், தண் ணீர் இவற்றைச் சொரிந்து நற்சொல் கேட்பர். தற்காலத்தில் ஆவேசம் வந்து சாமியாடி குறி சொல்லுவது போல் பழைய காலத்தில் இருந்தது.

நிமித்தத்தில் நல்ல நிமித்தமும் உண்டு, கெட்ட நிமித்தமும் உண்டு. நடுப்பகலில் தும்பி பறப்பது, இரவில் விளக்குச் சரியாக எரியாமல் அணைந்து அணைந்து எரிவது, கூகை இரவிலே

விடாமல் கூவுவது, ஓயாமல் தூக்கம் வருவது ஆகியவை தீய நிமித்தங்கள். வானத்தில் விண்மீன் ஒன்று (எரிநட்சத்திரம்) கீழே விழுந் தால், ஏழாம்நாளில் அரசன் இறந்து போவான் என்று எண்ணிய எண்ணமும் இருந்தது.

பெண்கள் கையில் அணிந்துள்ள வளையல் இறுகிப் போவது நல்ல நிமித்தமாகக் குறிப் பிடப்படுகிறது.

பல்லி சொல்லுக்குப் பலனைக் கவனிக்கும் வழக்கமும் அக்காலத்தில் இருந்தது.

குறிபார்த்துச் செயல் செய்வதிலும் சங்க கால மக்களுக்கு நம்பிக்கை இருந்தது. இவ் வழக்கம் மிகுதியாகவே இருந்தது.

குறிபார்த்துச் சொல்வதற்கென்றே பெண் கள் உண்டு. அவளுக்குக் கட்டுவிச்சி என்று பெயர். பெரும்பாலும் நரைதிரை கொண்ட முதியோளாக இவள் இருப்பாள். முறம் அல்லது சுளகில் நெல்லைப் பரப்பி அதனை எண்ணுவாள். அதனல் வரும் நிமித்தங்களை அறிந்து அவள் கூறுவாள். சில சமயங்களில் தெய்வம் ஏறிக் குறி சொல்லுதலும் உண்டு. இப்பெண்டிர் பிற்காலத்தில் குறி சொல்லும் குறத்தியர் எனப்பட்டனர்.

ஆடவர் குறி பார்த்துச் சொல்லுவதும் உண்டு. அவ்வாறு குறி பார்த்துச் சொல்லு பவனுக்கு வேலன் என்பது பெயர். இவன் குறி பார்த்துச் சொல்லுவதற்குக் கழங்கு பார்த் தல் என்று சொல்லப்படும்.

காக்கை கரைந்தால் விருந்தினர்கள் வருவார் கள் என்ற நம்பிக்கை தற்காலத்திலும் இருக் கிறது. இதே நம்பிக்கை சங்ககாலத்திலும் இருந்து வந்தது. காக்கை பாடினியார் நச் செள்ளையார், சிறு காக்கை பாடினியார் என்ற பெயர்கள் கொண்டபுலவர்கள் காக்கை கரைந்த நிமித்தங்களைப் பாராட்டிப் பாடியபுலவர் பெரு மக்கள் ஆவார்கள்.

உணவு உண்பதற்கு முன்னர்க் காக்கைக்கு உணவு அளிக்கும் பழக்கம் இப்பொழுதும் சில இடங்களில் இருந்து வருகிறது. இவ்வழக்கம் சங்க காலத்திலும் இருந்து வந்தது. தென்னந் தோப்புக்களில் வாழ்ந்த மக்கள் கூட்டத்தினர் காக்கைக்கு உணவளித்தனர் எனவும், வெண் ணெல் அரிசிச் சோற்றை நெய்யுடன் கலந்து காக்கைக்கு இட்டனர் எனவும் சங்கநூல்கள் கூறுகின்றன.

இத்தகைய நம்பிக்கைகள் சங்ககாலத்தில் இருந்து வந்தன.

வேள்வி என்ற யாகம் செய்யும் முறை சங்க காலத்தில் இருந்து வந்தது. அதற்கு முந்திய தமிழ் நாட்டில் இம்முறை இருந்ததாகச் சொல் லப்படவில்லை. சங்க காலத்தில் இவ்வழக்கம் தமிழ்நாட்டில் நடைமுறையில் இருந்து வந்துள்ளது.

பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்பது பாண்டியமன்னன் ஒருவனின் பெயர். பல யாகங்கள் செய்து நாட்டை ஆண்டு வந் தான் என்பது அவனுடைய பெயரால் தெரிய வருகிறது. யாகம் மூன்று வகைப்படும். ஆகவனீயம், காருகபத்தியம், தாட்சிணக்கியம் என்பன அவை. வில்வடிவத்தில் அமைக்கப் பட்டுள்ள யாகசாலை ஆகவனீயம். அறு கோண வடிவத்தில் அமைக்கப்பட்ட யாகசாலை காருக பத்தியம். செவ்வக வடிவத்தில் அமைக்கப் பட்ட யாகசாலை தாட்சிணக்கியம்.

வேள்வி செய்யும் முறையைப் பழந்தமிழ் நூல்கள் விரிவாக இயம்புகின்றன. வேள்வி செய்பவன் தோல் ஆடையை அணிதல் வேண் டும். வேள்வித் தீயில் நெய் சொரிதல் உண்டு. வேள்வி முடிந்தபின் அனைவருக்கும் பெரு விருந்து வழங்குவதும் உண்டு.

பெருஞ்சேரல் இரும்பொறை என்ற சேர மன்னன் யாகம் செய்வதற்குரிய விதிகளைக் கேட்டு, தன் மனைவியோடு இருந்து வேள்வி செய்தான். வேள்விக்குரிய மந்திரங்களை அரசி யின் கருவில் இருந்த குழந்தை செவிமடுத்து, பிற்காலத்தில் அரசாள்வதற்குரிய எல்லா வகைச் சிறப்புக்களோடும் பிறந்தது எனப் பதிற்றுப்பத்து என்ற சங்கநூல் கூறுகிறது.

சீமந்தம் என்ற வளைகாப்பு விசேடம் நம் சமுகத்தில் உள்ளது. கருக்கொண்ட எட்டு, ஒன்பதாம் மாதங்களில் இவ்வளைகாப்பு விசே டம் நடத்தப்படும். வளைகாப்பு விசேடத்தன்று மகப்பேற்றுக்குரிய பெண்ணை அமர்த்திவைத்து மந்திரங்கள் உச்சரிப்பதுண்டு. பிரகலாதனைப் போல, இக்குழந்தையும் தாயார் கருவினுக்குள் இருந்துகொண்டே இம்மந்திரங்களைக் கேட்டு நல்லுணர்வு பெறும் என்று இதில் நம்பிக்கை யுள்ளவர்கள் கூறுகிறுர்கள்.

# இலட்சிய புருஷன் இராமபிரான்

( சுவாமி துருவானந்தர் )

தெய்விகப் பண்புகளுக்கும், அறவாளர் களின் பெருவாழ்வுக்கும் யாண்டும் நிலைக்களனு யிருப்பது நம் பாரதநாடு. இப்பண்பைப் போற்றி உலக முழுவதிலிருந்தும் பலர் ஆன்ம சாந்திபெற நம் நாட்டைத் தேடி வருகிருர்கள் என்பது உண்மை. முன்பு இருந்த அறப் பண்பு மக்கள்பால் இன்று உள்ளதா? தெய் விகப் பண்புகளை நூல்களின் வாயிலாகத்தான் கேள்விப்படுகிறோம். அவற்றை நடைமுறையில் கொண்டுவருகிறவர்கள் எங்கே? ராமன், கிருஷ்ணன், புத்தர், இராமகிருஷ்ணர், விவே கானந்தர், மகாத்மாகாந்தி போன்ற பெரியவர் கள் பெருவாழ்வு வாழ்ந்தவர்களாவார்கள். இன்று அவர்கள் இல்லாது போனுலும் அவர் கள் வாழ்ந்த வாழ்க்கைமுறை, வாழ்ந்துகாட்டிய தெய்விகப் பண்புகள் இன்னும் அழியவில் லையே! அவற்றை நாமும் கடைப்பிடிக்க வேண்டும்.

நோயிருக்கும் இடத்தில்தான் வைத்திய னுக்கு வேலை. கலகம், அடிதடி நடக்கும் இடத்தில்தான் போலீஸ்காரனுக்கு வேலை. அதை முன்னிட்டு வழக்குப் பதிவு செய்து அதை விசாரிக்க வக்கீல், நீதிபதி, கோர்ட் ஆகியவை தேவைப்படுகின்றன. ஓர் ஊரில் நடக்கும் கோஷ்டி கலவரத்தை அவ்வூர் போலீஸ்காரர்களால் அடக்க முடியாது போய் விட்டால் ஆயுதம்தாங்கிய போலீஸ் தருவிக்கப் படுகிறது. அவர்களாலும் சமாளிக்க முடியாத போது ராணுவம் உடனே வந்து தன்னுடைய அசுர பலத்தைக் காட்டி அதை அடக்குகிறது. அதே பாங்கில் மக்கள் மனம் கெட்டு, துஷ்டத் தனம் தலையெடுக்கிறபொழுது ஆங்காங்கே சான்ருேர்கள் தோன்றி அந்த அந்தச் சமூகத் தைத் திருத்தியமைக்க முயல்கின்றனர். சிறிது காலம் கழித்து அந்தச் சான்ருேர்களும் மக்கள் மனதிலிருந்து மறக்கப்படுகிறபொழுது அவ தார புருஷர்கள் மக்கள் எப்படி வாழவேண்டும் என்பதைத் தங்கள் வாழ்க்கை மூலம் வாழ்ந்து காட்டுகின்றனர். கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என யுகங்கள் நான்கு இருக்கின்றன. எப்பொழுது தர்மமும், நீதியும் செழித்துள்ளனவோ அது கிருதயுகம் எனப் படும். தர்மம் என்ற பசு கிருதயுகத்தில் நான்கு கால்களால் நிற்கிறதாம். திரேதாயுகத்தில் மூன்று கால்களால் நிற்கிறதாம். துவாபர யுகத்தில் இரண்டு கால்களாலும், கலியுகத்தில் ஒற்றைக்காலில் நிற்க முடியாதபடி தத்தளித்துக் கொண்டும் இருப்பதாகப் பெரியவர்கள் உருவ கப்படுத்திவைத்தனர். இவ்வுலகில் பிறக்கிற வர்கள் யாரும் வீணுகப் பிறப்பதில்லை. ஒவ் வொருவரும் அவரவர் காரியத்தை முடிக்கவே இம்மண்ணுலகில் தோன்றுகின்றனர். சத்தியம் பேசுவதன் மூலமும், தர்மத்தைக் கடைப்பிடிப்ப தன் மூலமும் எத்தகைய பெருவாழ்வு வாழமுடி யும் என்பதை இராம அவதாரம் காட்டுகிறது. நல்லவர்களைக் காக்கவும், தீயவர்களை அழிக்க வும், நாட்டில் தெய்வ நம்பிக்கையை வளர்க்க வும் கிருஷ்ணுவதாரம் ஏற்பட்டது. மக்களைக் கர்மகாண்டத்திலிருந்து விழித்தெழச் செய்து, முயற்சியால் எதையும் பெறலாம் என்பதைக் காட்டவே புத்தாவதாரம் வந்தது.

'கடவுள் இல்லை' என்று கூச்சலிடுகிற கூட்டத்தாரும் தங்கள் தலைவனிடம் உள்ள சிறந்த குணங்களைக் குறித்துச் சிலாகித்துப் பேசுகின்றனர். அவரை இதயத்தில் வைத்து வணங்குகின்றனர். எல்லாரும் மதித்துப் போற்றுகிற உயர்ந்த குணங்களைத் தெய்வீக குணங்கள் என்கிருேம். அந்தத் தெய்வீக குணங் கள் படைத்தவர் எங்கிருந்தாலும், யாரா யிருந்தாலும் அவர் வணங்கத்தக்க மூர்த்தியே. அவதார புருஷர்கள் தங்கள் வாழ்வின் மூலம் அரிய பெரிய உண்மைகளை வாழ்ந்து காட்டு கின்றனர். கலங்கரை விளக்குப்போன்று கண்ட வர், கேட்டவர் அனைவருக்கும் அவர்தம்வாழ்வு பொன்ருத் துணையாகவிருக்கிறது. ஒவ்வொரு மானுடனும் பின்பற்றத்தக்க செயல்களைத் தம் வாழ்வு முழுவதும் வாழ்ந்து காட்டிய மூர்த்தி இராமனே ஆவார்.

இராமாயணமும், மகாபாரதமும் நமக்குக் கிடைத்துள்ள தெய்வீகப் பொக்கிஷங்கள். அவற்றில் வருகிற ராமனும், கிருஷ்ணனும் மற்றையவர்களும் நம் போன்று உடல் தரித்து

வாழ்ந்தவர்கள். அவர்கள் சரித்திர பூர்வமான சான்றோர்கள். அவர்கள் நம் நாட்டில் வாழ்ந்த தற்கு இன்று வேண்டியவாறு ஆதாரம் கிடைத் துள்ளது. யாரோ சொல்லுகிற கூற்றை நம்பி அவர்களைக் கற்பனை புருஷர்கள் என்று நாம் அறவே ஒதுக்கிவிடக் கூடாது. மகாத்மா காந்தியைப் பார்த்திராத இக்காலச் சிறுவர் களுக்குக் காந்தி என்று ஒருவர் இருந்திருக்க முடியுமா? என்று ஐயம் ஏற்படுவது இயல்பே. நம் தாய் தந்தையரைப் பிறந்தவுடன் நாம் அறிந்துகொள்ளவில்லை. தாய் தந்தையர்களை யும் நம்பிக்கை மூலம்தான் ஏற்றுக்கொள்ள வேண்டும். அஃதே போன்று சான்றோர்களையும் நம்பிக்கை மூலம்தான் ஏற்ருகவேண்டும்.

நினைப்பது போன்று நடந்துவிட்டால் ஒவ் வொருவனும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்குகின் றான். தோல்வியோ, ஏமாற்றமோ ஏற்பட்டு விட்டால் மனத்தடுமாற்றம் அடைகின்றான். எப்படிப்பட்ட சூழ்நிலையிலும் மனத்தடுமாற்ற மடையாது நடுநிலை வகிப்பவனே பக்குவமடைந் தவனாகிறான். ராமன் அரசவாழ்வையும் ஆரண்யவாழ்வையும் சமமாக ஏற்றுக்கொண் டான். அது அவன் பெருமைக்குச் சான்றாகும்.

தீண்டாமைபற்றிப் பேசுகிறவர்கள் தீண்டத் தகாதவர்கள் என்பவர்களிடம் அந்தஸ்து, அதிகாரம் இருந்தால் அவர்களோடு இணக்கம் வைப்பார்கள். எதுவுமில்லாத ஏழையாக இருப்பவனிடம் யாரும் நெருங்கார். எவன் எங்கும் ஈசனைக் காண்கிறானே அவனே தீண்டாமை என்ற நோயினின்று விடுபடுவான். மக்களைத் தெய்வமாகப் பாவிக்காதவர்கள் ஏழையின் சிரிப்பில் எங்ஙனம் இறைவனைக் காண முடியும்? காட்டில் வசித்த குகனைச் சகோதரனாக ஏற்று 'நின்னொடும் ஐவரானோம்' என்கிறான் ராமன். பறவையினமாகிய ஜடாயு வைச் சந்தித்து அது பண்ணிய தியாகத்தை எண்ணிக் கண்ணீர் விட்டு இறந்த அதற்கு ஈமச் சடங்கை தந்தைக்குச் செய்ததைப் போன்று செய்து முடிக்கிறான். குரங்குக் கூட் டத்திலுள்ள சுக்ரீவனையும், ஆஞ்சனேயனையும் தன் உற்ற தோழர்களாக ஆக்கிக்கொள் கிறான். இறுதியில் அரக்கர் குலத்தில் தோன் றிய விபீஷணனையும் தன் சகோதரனாக ஏற்று இலங்கைக்கு அதிபதியாக்குகிறான். இராமன் சிறப்பை எங்குக் கண்டானோ அங்கு அதை அங்கீகரிக்கின்றான்.

உலகில் பிறந்த ஒவ்வொருவரும் உலகத்தவ ரோடு உறவாடாது, தனித்திருந்து வாழப் பிறந்தவர்களல்லர். 'ஊருடன் கூடிவாழ்' என்பது கோட்பாடு. மக்களோடு மக்களாகச் சேர்ந்து வாழ்ந்து, பரஸ்பரம் ஒருவருக்கொரு வர் இன்ப துன்பங்களைப் பகிர்ந்து வாழ்வதே நல்ல சமுதாயத்தின் கடமையாகும்.

परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ

'பரஸ்பரம் உதவி செய்து பெரு நன்மை யெய்துவீர்' என்று கிருஷ்ண பரமாத்மாவும் கீதையில் கூறுகிறார். சிறுவனாயிருந்தபொழுது விசுவாமித்திரருக்கு ராமன் செய்த சேவை ஒப் பற்றது. அதில் பிரீதியடைந்த முனிவர் சக்தி பொருந்திய மந்திரங்களை இராமனுக்கு உபதேசித்தார். பதினான்கு ஆண்டுகள் காட் டில் இருந்தபொழுது ரிஷிகள் சேவையிலும், அரக்கர்களை அழிக்கும் செயலிலும் ஈடுபட் டான். அதனால் மகிழ்ச்சியடைந்த அகஸ்தியர் அரிய பெரிய அஸ்திர சஸ்திரங்களை அவ னுக்கு அளித்தார். நாட்டை விட்டுத் துரத்தப் பட்ட சுக்ரீவனுக்கு உதவி செய்வதாக வாக்குக் கொடுத்து அதன்படி வாலியை வதைத்தான். சுக்ரீவனுக்கு அவனுடைய நாட்டையும், மனை வியையும் மீட்டுத்தந்தான். அதற்கு ஈடாக சுக்ரீ வனும் தன் வானரப்படைகளை நாலாப்பக்கமும் அனுப்பிச் சீதையைத் தேடும் முயற்சியில் ஈடு பட்டான். ராம காரியத்திற்கென்றே தன் அறிவிற்சிறந்த அமைச்சன் ஆஞ்சனேயனை இராமனுக்கு அர்ப்பணிக்கின்றான். குடும்பஸ்த னாகக் கடவுளே அவதரித்தாலும் பிறரிடம் உதவி கேட்டுத்தான் ஆகவேண்டும் என்பதைத் தன் வாழ்க்கையில் ராமன் காட்டித்தருகிறான்.

எல்லா உயிர்களுக்கும் சத்துருக்கள் உண்டு. சத்ருக்களிடமிருந்து சமாளிக்கக் கற்றுக்கொள் வதே ஒருவித வாழ்க்கைப் பயிற்சி. இவ்வாறு பண்பட்ட ஜீவன் மானுடப்பிறவி எடுத்தான பிறகு சத்ருவை மித்ருவாகக் கருதத் தொடங்கும் பொழுதுதான் அவன் பண்பட்ட மனிதனாகிறான். தன் பகைவனிடத்தில் ஒருவன் எப்படி நடந்து கொள்கிறான் என்பதை வைத்து அவனுடைய குணத்தை அறிந்துகொள்ளமுடியும்.

ராமனுக்கு இயற்கையாகச் சிலர் பகைவர்

கள் ஏற்பட்டாலும் முக்கியமானவர் பரசு ராமன், வாலி, ராவணன் என்பவர்களாவர். யாரிடம் எந்தெந்த இடத்தில் எப்படி எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்பதை அறிந்து ராமன் செயல்பட்டான். அகங்காரமும், சினமும் கொண்ட பரசுராமன் இராமனை இன்னுர் என்று தெரிந்துகொள்ளாது பதைபதைப் போடு வாய்க்கு வந்தபடி திட்டினன். பெரியவர்களிடம் தவறு இருந்தால் அந்தத் தவறைச் சிறியவர்கள்எப்படிச் சுட்டிக்காட்டிஅவர்களைப் புரிந்து கொள்ளும்படி செய்வது என்பதை ராமன் பரசுராமனிடம் நடந்துகொண்ட முறையிலிருந்து அறிந்துகொள்ளலாம். தம்பி மனைவியைக் கவர்ந்துகொண்டது மட்டுமல்லாது அவனை நாட்டைவிட்டே துரத்தியவனுக்கு என்ன உபதேசம் புகட்டினலும் ஏருது என்று எண்ணி வாலியின் சக்தியைப் புரிந்துகொண்டு மறைந்து இருந்து அவனை ராமன் வீழ்த்தினன். இறுதி நேரத்திலாவது புத்தி வந்து சரணடைந்த வாலிக்கு முக்தி அளித்தான். இறுதியில் இராவணனுக்கு எவ்வளவோ புத்திபுகட்டியும், திருந்தியமைய அவகாசம் கொடுத்தும் இறுமாப்புற்ற அரக்கர் வேந்தன் திருந்தியமையவில்லை. ஆகவே இறுதியில் இராமபாணம் இராவணனை வீழ்த்தியது. இராவணன் போன்ற கூட்டத்தார் சமுதாயத்தில் என்றும் இருப்பார்கள். இராமனல் திருத்த முடியாத இராவணன் போன்ற கூட்டத்தைத் திருத்தியமைக்க யாராலும் முடியாது. அவர்களை அழித்து ஒழிப்பதே சிறந்த வழி.

'சொல்லுதல் யார்க்கும் எளியது அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்' என்கிறது தமிழ் மறை. சொன்னபடி செய்வது மிகவும் அரிது. தனக்குத் தெரிந்த உயர்ந்த கோட்பாடுகளைப் பிறர்க்கு அழகாகப் போதிப்பது வேறு. அவற்றைத் தன் வாழ்க்கையில் கடைப்பிடிப்பது வேறு. தாங்கள் சொல்லுகிறபடி நடக்கிறவர்களே சான்றோர்கள். மகாத்மா காந்தியிடத்தில் ஒரு கேள்வி எழுப்பப்பட்டது. சாதாரணமான காந்தியாக இருந்த நீங்கள் எப்படி மகாத்மா காந்தி ஆனீர்கள்? இந்தக் கேள்விக்குக் காந்தியடிகள் கொடுத்த பதிலில் "நான் எதைக்கடைப் பிடிக்கிறேனே அதைத்தான் பிறர்க்குச்சொல்லுகிறன். நான் கடைப்பிடிக்காத எதையும் பிறரைக் கடைப்பிடிக்குமாறு சொல்லமாட்டேன்" என்ருர். அவர் மகாத்மா ஆனதின் ரகசியம் இப்பொழுது விளங்குகிறதல்லவா? இன்றைய அரசியல்வாதிகள் ஏராளமாகப் பேசுவார்கள்; எழுதுவார்கள். அவர்களின் பேச்சுக்கும் வாழ்க்கை முறைக்கும் எந்தவிதமான சம்பந்தமுமிராது. அதனுல்தான் அவர்கள் பதவிக்கு வந்து சில காலம் இருந்துவிட்டு மின்மினி பூச்சிபோல் மறைந்துபட்டுப் போகிருர்கள்.

ஆட்சி நடத்துபவர்கள் அறப்பண்பே வடிவெடுத்தவர்களாக இருக்கவேண்டும். எதிர்க் கட்சிக்காரர்கள் வியக்குமளவு அவர்களின் வாழ்வு தூய்மையானதாக எளிமையாக இருக்க வேண்டும். பிறர் குற்றத்தைக் காணுது தங்கள் குற்றம் குறைகளைக் கண்டு தங்களைத் திருத்தியமைத்துக்கொள்ள வேண்டும். அமைச்சர்கள், மக்களின் பிரதிநிதிகள், மதுவிலக்கைக் கட்டாயப்படுத்துகிறவர்கள் தங்கள் கட்சிக்காரர்களைவரையும் மது குடிக்காமலிருக்கும்படி செய்யவேண்டும். எல்லா நற்பண்புகளையும் தங்கள் மூலம் மக்கள் தெரிந்துகொள்ளுமளவு தங்களைத் தூயவர்களாகவைத்துக்கொள்வது ஆட்சி நடத்துபவருடைய கடமை ஆகும். அவர்களைப் பார்த்து நல்வழியைப்பின்பற்றுது பின் யாரைப் பார்த்து நன்மை கடைப்பிடிப்பார்கள்! ராம ராஜ்யத்தில் ராமன்தான் மக்களுக்கு முன் மாதிரியாகத் திகழ்ந்தான். சுயநலம் முற்றும் துறந்திருந்த ராமனுக்கும் சோதனை ஒன்று வந்தது. பதிவிரதை சீதாபிராட்டி மீது ஒரு அபாண்டமான பழியைச் சுமத்தினன் பாதகன் ஒருவன். "அயலான் வீட்டில் வெகுகாலம் தங்கியிருந்த சீதாதேவி எங்ஙனம் புனிதவதி ஆவாள்?" என்ருன். இப்படி ஒரு சந்தேகம் மக்களிடம் வரும் என்றுதான் ராமன் ஏற்கனவே சீதையை அக்னி பிரவேசம் பண்ணச் சொன்னன். அவளின் தூய்மையை அக்னியே நிருபித்து ஆசீர்வதித்தது. மறுபடியும் இந்த அவச்சொல் வரவே புனிதவதி கர்ப்பிணியான சீதையைக் காட்டில் விட்டுவிடும்படி ராமன் ஆணையிட்டான். அவன் தன்னை மக்களின் பிரதிநிதியாகக் கருதினன். தன்னிடம் சுயநலம் அணுவளவும் இல்லாது வாழ்ந்தான். பெருவாழ்வு வாழவிரும்பும் ஒவ்வொருவரும் ராமனைப் பின்பற்றுவார்களாக.

# குறிப்புகள்

**விரதங்களும், விழாக்களும்**

சமயப் பற்றுடைய மக்கள் விரதங்களையும் விழாக்களையும் கொண்டாடி வருகிறார்கள். விரதங்களும், விழாக்களும் சமயத்தோடு சம்பந்தப்பட்டு இருக்கின்றன. சமய சம்பந்தமான உணர்வை மக்களிடத்தில் தூண்டிவிட விரதங்களும் விழாக்களும் பயன்பட்டு வருகின்றன. விரதங்களையும், விழாக்களையும் கடைப்பிடிப்பவர்கள் உள்ளத்தில் சமய நம்பிக்கை வேரூன்றி வருகிறது. மக்களிடையே சமயப் பற்றை வளர்ப்பதற்கு விரதங்களையும் விழாக்களையும் அவர்களுக்குச் சரியான முறையில் புகட்டுவது அவசியமாகிறது. கற்றவர்கள் இடையே விரதங்களிலும் விழாக்களிலும் நம்பிக்கை குறைந்து வருகிறது. அவைகளை அனுஷ்டிப்பது பரிகாசத்துக்குரியது என்ற எண்ணம் அவர்களுடைய உள்ளத்தில் இருந்து வருகிறது. பழைமையில் நம்பிக்கை உடையவர்கள் விரதங்களையும் விழாக்களையும் தத்துவம் அறியாது அனுஷ்டித்து வருகிறார்கள். அவர்களுக்கு அவைகளைப்பற்றிய சரியான தத்துவம் தெரியாமையால் மற்றவர்களுக்கு எடுத்து விளக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள். மேலும் சில மூடப்பழக்க வழக்கங்களுக்கும் அவர்கள் இடம் தந்துவிடுகிறார்கள். புரோகிதர்கள் மக்களிடையே பணம் பறிப்பதற்கு விரதங்களையும், விழாக்களையும் பயன்படுத்திக்கொள்கிறார்கள். அவற்றைப்பற்றிச் சரியாக அறிந்து அவற்றை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவந்தால், உள்ளம் பண்பட்டு, கடவுள் விசுவாசமும், கடவுளிடத்துப் பக்தியும், உயிர்களிடத்து அன்பும் உள்ளத்தில் உண்டாகின்றன. விரதங்களும் விழாக்களும் ஆத்மீக உணர்வை உள்ளத்தில் ஊட்டி வருகின்றன. மக்களிடையே ஒற்றுமையையும், உற்சாகத்தையும், தூய்மையையும், மகிழ்ச்சியையும் ஏற்படுத்துவதற்கு விரதங்களும், விழாக்களும் பயன்பட்டு வருகின்றன.

புலன்களைக் கட்டுப்படுத்துவதற்கும், மனதைத் தூய்மைப்படுத்துவதற்கும் உறுதியான சங்கல்பம் செய்து அதன்படி ஒழுகுவது விரதமாகும். நிலத்தை உழுது பண்படுத்துவதன் மூலம் அதிலிருந்து நல்ல விளைவை உண்டுபண்ணலாம். அங்ஙனம் உள்ளத்தை விரதத்தின் மூலம் பண்படுத்தினால் அது முக்திக்குத் தகுதியுடையதாகிறது. விரதத்தின் பொழுது உண்ணுது உள்ளத்தைத் தெய்வத்தின்பால் செலுத்துகின்ற செயல் நிகழவேண்டும். உபவாசமென்றும் விரதத்துக்கு வேறு பெயர் கொடுக்கலாம். உப என்றால் சமீபம் என்பது பொருள். வாசம் என்றால் வசித்திருத்தல் என்பது பொருள். உபவாசம் என்றால் தெய்வத்துக்குப் பக்கத்தில் வசித்திருத்தல் என்பது பொருள். பூஜாகிரியைகள் மூலமாகவும், ஜபம், தியானங்கள் மூலமாகவும் மனத்தை விரதகாலத்தில் தெய்வத்தின்பால் செலுத்த முயல்கின்றோம். பஜனை செய்வதும் பகவத் சிந்தனையை மனதில் வளர்க்கும். உடலையும், வசிக்கும் வீட்டையும், சுற்றுப்புறங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ளுவதன் மூலம் புறத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்ள பயிற்சி பெறுகின்றோம். உணவு எடுத்துக்கொள்ளாது இருப்பதன்மூலம் ஜீரண கருவிக்கு அன்றைக்கு ஓய்வு தருகின்றோம். அதனால் ஜீரணக்கருவி புதுப்பிக்கப்படுவதாகின்றது. நல்ல விஷயங்களில் விரதத்தன்று மனதை ஈடுபடுத்துவதால் மனதும் புதுப்பிக்கப்படுவதாகிறது. உலக வியவகாரங்களிலே நாள்தோறும் பெரும்பாலார்களுடைய மனம் உழன்றுகிடக்கின்றது. அம்மனதுக்கு இடையிடையே மாற்றமிருப்பது அவசியமாகிறது. தூய பாவனையை மனதில் வரவழைத்துக்கொண்டு விரதகாலத்தில் சத் விஷயத்தில் மனம் ஈடுபடுகிறது. அதனால் மனம் உற்சாகமும், சாந்தியும், ஓய்வும் பெறுகிறது.

ஆடிப்பண்டிகை, தீபாவளி, பொங்கல், கோயில்திருவிழாப் போன்ற விழாக் காலங்களில் மக்கள் வீடுகளையும் சுற்றுப்புறங்களையும் தூய்மைப்படுத்துகின்றார்கள். வீட்டின் சுவர்களுக்கு வெள்ளையடித்து அழகுபடுத்துகிறார்கள். இத்தகைய செயல்கள் மூலம் சுகாதார முறை பின்பற்றப்படுவதாகிறது. அதனால் நோய்க்கிருமிகள் அழிகின்றன. மக்களுக்கு ஆரோக்கியம் உண்டாகிறது. மேலும், விழாக் காலங்களில் மக்கள் அனைவரும் மகிழ்ச்சி

யோடு நீராடி உற்றார் உறவினர்களோடு கூடி மகிழ்ந்து இருப்பதன் மூலம் மனதில் புத்துணர்ச்சி பெறுகின்றனர். புது ஆடை, புதுப்பாத்திரங்கள் விழாக்காலங்களில் உபயோகப்படுத்தப்படுகின்றன. அப்படி அவைகளை உபயோகப்படுத்துவதால் மனதில் புதுமை உணர்ச்சி உண்டாகிறது.

இயற்கையில் சத்துவகுணம் ஓங்கும்பொழுது அதை நல்ல வேளை யென்றும், நல்ல நாள் என்றும் சொல்லுகின்றோம். அத்தகைய நல்ல வேளைகளில் சுபகாரியங்கள் செய்தால் அவை நன்கு வளர்ச்சியடைகின்றன. ஆகையால்தான் சுபகாரியங்கள் செய்வதற்கு நல்ல நாள் பார்க்கும் வழக்கம் இருந்து வருகிறது. இயற்கையில் ரஜோகுணமோ, தமோகுணமோ ஓங்கும்பொழுது அது கெட்ட வேளை அல்லது கெட்ட நாள் என்று சொல்லப்படுகிறது.

ஒவ்வொரு நாளும் அதிகாலை நான்கு மணியிலிருந்து சூரியோதயம்வரையிலுள்ள காலம் பிராம்ம முகூர்த்தம் ஆகும். அப்பொழுது சத்துவகுணம் இயற்கையில் ஓங்கியிருக்கிறது. ஆகையால்தான் அவ்வேளையில் உறங்காது உற்சாகமாகக் கடவுள் வழிபாட்டில் ஈடுபட வேண்டுமென்று வற்புறுத்தப்படுகிறது. நம்மிடத்திலும் அப்பொழுது சத்துவகுணம் ஓங்கியிருப்பதால் அவ்வேளையில் இயற்கையிலுள்ள சத்துவகுணத்தையும் பயன்படுத்திக் கொண்டால் நாம் விரைவில் பண்பட்ட மனிதர்களாக மாறி அமைவோம். வானசாஸ்திரமும், ஜாதகமும் சரியாகக் கணிக்கப்பட்டால் இயற்கை பற்றிய உண்மையையும், இயற்கையில் நடக்கிற நிகழ்ச்சியையும், நம்மிடம் நிகழ்கின்ற நிகழ்ச்சியையும் அவை சரியாகச் சொல்லுகின்றன. ஒவ்வொரு நட்சத்திரத்தினுடைய ஆதிக்கம் வரும்பொழுது அதற்குரிய செயலைச் செய்கிறது. விரதங்களின் மூலமாகவும், விழாக்களின் மூலமாகவும், நம்மிடமுள்ள சத்துவகுணத்தை வளர்க்க முயலவேண்டும். நம்மிடம் சத்துவகுணம் நன்கு ஓங்கிவிட்டால் எந்தக் கிரக பலனுடைய வேகத்தையும் குறைத்துவிடலாம். விரததினங்களன்றும், விழாத் தினங்களன்றும் நம்உள்ளத்தைத் தெய்வ சிந்தனையில்மூழ்கடிக்க வேண்டும். இதுவே விரதங்கள், விழாக்களின் நோக்கமாகும். இவ்வுண்மையை அறிந்து விரதங்களையும், விழாக்களையும் நாம் அனுஷ்டித்து வர வேண்டும். இதை மறந்துவிட்டுக் கிரகசாந்தி பண்ணுகிறேன் என்று பணம் பிடுங்கும் போலிகளிடம் நாம் அகப்பட்டுக்கொள்ளக் கூடாது. பொல்லாத கிரகம் ஒன்று வருவதாகக் கூறி அதற்குச் சாந்தி பண்ணவேண்டுமென்று பணம் பிடுங்குகின்றவர்களுடைய பேச்சை நம்பக் கூடாது. அவர்களுடைய பேச்சை நம்பி விழாக்களையும், விரதங்களையும் அனுஷ்டிப்பவர்கள் மூடக் கொள்கையுடையவராகின்றனர். அவர்களுடைய போக்கு கண்டிக்கத்தக்கது. சத்துவகுண வளர்ச்சிக்காக விரதங்களையும், விழாக்களையும் கொண்டாடுபவர்கள் உண்மையில் பண்பட்ட மனிதர்களாகிறார்கள். தங்களைப் பண்பாளர்களாக ஆக்கும் பொருட்டு விரதங்களையும், விழாக்களையும் அனுஷ்டிக்கும் மக்கள் நாட்டில் பெருகி வருவார்களாக.

---

# செய்திகள்

**நிகழ்பவை**

ஏப்ரல் மாதம் 15-ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமையன்று திருநெல்வேலிஜில்லா, இடிந்தகரையில் ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் ஒருநாள் அந்தர்யோகம் நடாத்துவார்கள்; அன்று மாலை கன்னியாகுமரி ஜில்லா, தக்கலை ஸ்ரீபெருமாள் கோவிலில் நடக்கும் மகாபாரத உபந்யாச பூர்த்திவிழாவுக்கு ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் தலைமைதாங்கி ஆசியுரை வழங்குவார்கள்.

16—4—79 திங்கட்கிழமையன்று மாலை கன்னியாகுமரி ஜில்லா சாமியார் மடம் ஸ்ரீ தர்ம சாஸ்தா ஆலயத்தில் நடக்கும் கம்பராமாயண பூர்த்தி விழாவுக்கு ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்கள் தலைமைதாங்கி ஆசியுரை வழங்குவார்கள்.

ஏப்ரல் மாதம் 24-ஆம் தேதி திங்கட்கிழமையன்று பிற்பகல் ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல மாணவர்கள் கோடை விடுமுறைக்காக அவரவர் ஊருக்குப் புறப்படுவார்கள்.

---

# ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுல உயர்நிலைப்பள்ளி

திருப்பராய்த்துறை – 639 115, திருச்சி ஜில்லா.

## குருகுலத்தில் புதிய மாணவர்களைச் சேர்ப்பது சம்பந்தமான அறிக்கை

இந்தப் பள்ளியில் 4 ஆம் வகுப்பு முதல் 10 ஆம் வகுப்பு வரையிலும் உள்ளன. 8 ஆம் வகுப்பும் அதற்கு மேலான வகுப்புக்களிலும் புதிய மாணவர்களைச் சேர்ப்பது இல்லை. 4, 5, 6, 7 ஆம் வகுப்புக்களில் மட்டும் புதிய மாணவர்கள் சேர்த்துக்கொள்ளப் படுவார்கள். புதிய மாணவர்களைச் சேர்க்க விரும்புவோர் மே மாதம் 30 ஆம் தேதி காலை 9 மணிக்குள் மாணவர்களுடன் இங்கு வரவேண்டும். அப்பொழுது மாணவர் களை நேரில் பார்த்து, அவர்களுடைய உடல்நிலை, படிப்பு, வேறு இயல்புகள் இவற் றைப்பரிசோதித்து அவர்களுக்கு இடமளிக்கப்படும். மற்ற நாட்களில் மாணவர்களைச் சேர்ப்பது இல்லை. பரீட்சைகள் மே மாதம் 30 ஆம் தேதி காலை 10-00 மணி முதல் முற்பகலிலும் பிற்பகலிலும் நடைபெறும். மாணவர்களைச் சேர்த்துக்கொள்வதற்கான முடிவுகள் அன்று மாலையிலும் இரவிலும் ஒவ்வொரு வகுப்பாக அறிவிக்கப்படும். இதற்காக விண்ணப்பத்தாள் எதுவும் எழுதியனுப்ப வேண்டியதில்லை. மாணவனை எடுத்துக்கொள்வதாக அறிவித்தவுடன் பொறுப்புத் தொகை ரூ. 200ம், சாமான்கள் பொருட்டு ரூ. 150ம் ஆக ரூபாய் 350 முன் பணமாகச் செலுத்த ஆயத்தமாகஇருக்க வேண்டும். இங்கு இடம் பெற்ற பிறகு, முன்பு படித்த பள்ளிக்கூடத்திலிருந்து பள்ளிக்கூட மாற்ற சர்டிபிகேட் வாங்கித் தந்தால் போதுமானது. உணவு, உடை, வாடகை, முட்டுவழிமற்றும் எல்லாச் செலவுகளுமாக வகுப்புக்கு ஏற்ப மாதம் ரூ. 140 முதல் ரூ. 160 வரை ஆகும். இலவசமாகவோ குறைந்த செலவிலோ மாண வர்களைச் சேர்த்துக்கொள்வதில்லை. போதனமொழி தமிழ். மேலும் விவரம் வேண்டு வோர்.50 பைசா ஸ்டாம்பு அனுப்பிவைத்து "வித்யாவன குருகுல சட்டதிட்டங்கள்" என்ற சிறு புத்தகத்தைப் பெற்று விவரம் தெரிந்துகொள்ளுங்கள்.

V. சோமசுந்தரம்
*தலைமை ஆசிரியர்*

சித்பவானந்த
*தலைவர்*

---

## மாணவ மாணவிகளுக்கு விடுதி வசதிகள்

மாணவர்களைக் குருகுலக் கல்லூரியில் சேர்ப்பதற்கு :

விவேகானந்த கல்லூரி, திருவேடகம் மேற்கு-624 217 மதுரை மாவட்டம்.

குழந்தைகளை நர்ஸரியிலும், ஆரம்பப்பள்ளியிலும் ( ஆண், பெண் ) சேர்ப்பதற்கு:

ஸ்ரீ ஸாரதா பாலமந்திர், சேலம்-636 007.

மாணவிகளை உயர்நிலைப்பள்ளியில் சேர்ப்பதற்கு :

ஸ்ரீ ஸாரதா வித்யாலயா, சேலம்-636 004.

மாணவிகளைக் கல்லூரியில் சேர்ப்பதற்கு :

ஸ்ரீ ஸாரதா கல்லூரி, சேலம்-636 004.

என்ற விலாசங்களுக்கு எழுதித் தெரிந்துகொள்ளுங்கள்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம் - பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை - பிரசார விலை | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... 3-00 |
| எதிர்கால இந்தியா | ... 3-00 |
| தினசரி தியானம் - பிரசார விலை | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ சாரதாதேவியாரது சரிதம் | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... 2-00 |
| **தாயுமானவர் இயற்றிய** | |
| பரிபூரணானந்தம் விரிவுரை | ... 3-00 |
| சின்மயானந்த குரு ஷை | ... 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... 3-00 |
| சுகவாரி ஷை | ... 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... 3-00 |
| எங்கும்நிறைகின்றபொருள் ஷை | ... 2-50 |
| பரசிவ வணக்கம் ஷை | ... 1-00 |
| விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) | ... 1-50 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-50 |
| சந்நியாசி | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... 1-00 |
| இராவண தத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| காயத்ரீ | ... 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... 1-00 |
| தானவீரன் கர்ணன் | ... 1-00 |
| பார்வதி,லக்ஷ்மி,சரஸ்வதி கர்வபங்கம் | ... 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-80 |

| | |
|---|---|
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ரூ. 0-80 |
| ஆத்ம சக்தி | ... 0-75 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறைவணக்கம் | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... 0-75 |
| *மனிதனது நிஜசொருபம் | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *சிவ தத்துவம் | ... 0-70 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | ... 0-60 |
| *சூரிய நாராயணன் | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| தெய்விக மகிமைகள் | ... 0-50 |
| சைவன் யார் | ... 0-50 |
| கர்மகாண்டம் எது?ஞானகாண்டம் எது | ... 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... 0-40 |
| வர்ணாச்ரம தர்மம் | ... 0-30 |
| அருள்விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... 0-30 |
| The Bhagavad Gita (9th Imp.) | ... 15-00 |
| The Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... 4-50 |
| Daily Divine Digest (Ordinary) | ... 2-50 |
| Mahabharata (with plastic cover) | ... 4-50 |
| Ramayana (do) | ... 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | ... 4-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... 4-00 |
| Siva Sahasranama Stotram | ... 3-50 |
| The Bhagavad Gita (Small Size) | ... 3-00 |
| Holy Bible—In the Light of Vedanta | ... 1-50 |
| *Introducing the Gita | ... 1-50 |
| *Key to Higher Life | ... 0-75 |
| *The Teacher | ... 0-60 |
| *The Student | ... 0-45 |

தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3 25ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள். *இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.